

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| துணர் | ஈசுவர வைகாசி | மலர் |
|---|---|---|
| ௧௫ | | ௨ |


உ

## 'கபிலர்' என்னும் நூலின் ஆராய்ச்சி.

திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்.

### கட்டுரை 1.

என் நண்பர் வித்துவான் திரு. வே. வேங்கடராஜலு ரெட்டியாரவர்களால் எழுதப்பெற்று, சென்னைப் பல்கலைக்கழக கழகத்தினரால் வெளியிடப்பட்ட 'கபிலர்' என்னும் உரைநூல் சென்ற யாண்டிலே அனுப்பப்பெற்று எனக்குக் கிடைத்தது. கிடைத்தும், யான் சிலயாண்டுகளாக நோயால் நலிவுற்று அவ் வப்பொழுது செய்யற்பாலவாய இன்றியமையா வினைகளன்றிப் பிறிதொன்றும் ஆற்றகிலாதிருந்து வருதலின் அதனைப் படித்துப் பாராதிருந்து விட்டேன். இப் பங்குனித்திங்களின் இறுதியிற் பிறிதொரு வேலையும் முன்னில்லாமையின் செவ்வி வாய்த்து அதனைப் படித்தறியலானேன். ரெட்டியாரவர்களது ஆராய்ச்சி யறிவை முன்னமே 'பரணர்' என்னும் நூலால் அறிந்துளேனு

கலின், இப்பொழுது புதுவதாக வியப்பொன்றும் தோன்ற வில்லை. ரெட்டியார் தமது நூலின் முன்னுரையில், இற்றைக்குப் பதினுறுண்டுகளின் முன் என்ணுல் எழுதிவெளியிடப் பெற்ற 'கபிலர்' என்னும் உரைநூலைச்சுட்டி, அஃதிருக்கவும் இஃது எழுதியது மிகையாகாதெனற்குக் காரணங் கூறுவாராய், "நாட்டாரவர்கள் பெரும்பாலும் கல்லூரி மாணவரின் பயனைக் கருதி அந்நூலை எழுதியுள்ளார்கள். இஃது அன்னதோர் நோக் கத்தால் எழுதப்பட்டதன்று" என்றுரைத்து, இரண்டிற்கு முள்ள வேறுபாடு சிலவற்றைக் குறித்திருப்பதுடன், நூலினகத் தும் சில விடங்களில் அந்நூற்கருத்துக்களைத் தாம் வேண்டு மாற்ருல் ஆண்டிருக்கின்றனர். அஃது என்பால் அவர் வைத் துள்ள அன்பிற்கும் மதிப்பிற்கும் அறிகுறியாம் என்றே எண்ணு கிறேன். எனினும், எனது நூலின் கருத்துக்களை ஆண்டுள்ள வகைமையிற் கற்பார்க்குத் திரிபுணர்ச்சியுண்டாகாவாறு சில வற்றை விளக்குதல் கடனெனக் கருதியும், அதனோடு எனக்கு அமைதியிலவாகத் தோன்றும் அந்நூற்பொருள்களிற் சில வற்றையேனும் வெளிப்படுத்தல் அன்னவர் ஆராய்ச்சி பின்னுந் தூய்மையுறுதற்கும், தமிழ் வளர்ச்சிக்கும் உரியதாமென ஓர்ந் தும் அவையிற்றைச் சிறு கட்டுரைகளாக எழுதி வெளியிடத் துணிந்தேன். இச்செயல் அந்நூலின் ஆசிரியர் பாலுள்ள நட்பின் கிழமைக்கும், மதிப்பிற்கும், தமிழ் வளர்ச்சிக்கும் பொருந்தியதாகுமென்பதே எனது துணிபு.

அந்நூலிற் புதுமையாகக் காணப்படும் சில சொல்லாட்சி முறையை முதலில் ஆராய்தற்கு எடுத்துக் கொள்கின்றேன். முகித்தல், அங்கனம், காண்கின்றது, நக்கீரர் என்பன முறையே ஆராயப்படும்.

"பரணர் என்னும் நூலை யான் எழுதி முகித்த பின்னர்" என அந்நூலின் முன்னுரை தொடங்குமிடத்தே 'முகித்த' என்றொரு சொல் ஆளப்பட்டுளது. 'பரணர்' என்னும் நூலின் முன்னுரையிலும் "அவர்களனைவரது வரலாற்றையும் ஒருங்கே எழுதி முகிப்பது அரிதாகுமாகலின்" எனவும், "தொல்காப்பி

யத்திற்கு ஓர் உரை எழுதக்கருதி, அதில் எழுத்ததிகாரத்திற்கு இப்போது உரை எழுதி முகித்திருக்கின்றேன்'' எனவும் ஈரிடத்தில் இவ்வினையின் ஆட்சி உளது. இதனை வழங்குவது வழுவாகாது என்று காட்டுதற் பொருட்டு "முகிந்தது என்னுஞ் சொல், வழக்கிலும் பழைய ஏடுகளிலும் வழங்குதலானும், 'ஆற்றிற் பாலத்தை முகித்தே னல்லேன்' (குற்றாலத்தல. கண்டகசேதன. 39) என்று செய்யுளிலும் வந்துள்ளதனானும், 'முகிதது' என்று கன்னடத்திலும், 'முகிஸெனு' என்று தெலுங்கிலும் வழங்குதலானும், முகிஎன்னுஞ்சொல் தொன்மையதே என்பது அறியப்படும்'' எனக்கீழ்க்குறிப்பில் விளக்கம் எழுதப்பட்டுளது. (கபிலர்—முன்னுரை.) தமிழ் லெக்சிகனிலும் இச்சொற்குப் பொருள் கூறுமிடத்தே 'ஆற்றிற்பாலத்தை' என்னும் இம்மேற்கோளும், கன்னடத்திலும் தெலுங்கிலும் இது வழங்குமாறும் காட்டப்பட்டுள்ளன. சங்கப்புலவர்களைப்பற்றி ஆராய்ச்சியுரை எழுதும் ஆசிரியரொருவர் பிற்காலத்துத் தலபுராணம் ஒன்றில் ஓரிடத்துக் காணப்படுவதன்றிக் கடல்போற் பரந்துள்ள தமிழ் இலக்கிய இலக்கணங்களில் யாண்டும் வழங்கப்படாததும், உரையாசிரியன்மார் எவரானும் தீண்டப்படாததும், எவ்விடத்து எத்திறத்து மக்களாலோ அருகி வழங்கப்படுவதுமாகிய திசைச்சொல் ஒன்றை முதன்மையாக நாட்டுவதும், அதனைப் பழைய தமிழ்ச்சொல் என்று நிறுத்தப்புகுவதும் நேர்மையுடையவாகத் தோன்றவில்லை. 'முகித்த' என்று எழுதியவுடன் அதனை விளக்குவான் புகுந்ததே அது தமிழ்மக்களின் வழக்கிலில்லாதது என்பதற்குச் சான்றாகும். அன்றியும், முகித்தல் வினையை நூன் முழுதும் கொண்டுய்க்காது முன்னுரையளவில் முடித்திருப்பது எழுதினோருக்கும் அஃது அருவருப்பு விளைத்திருக்குமென்பதனைக் காட்டா நிற்கும்.

இனி, 'அங்ஙனம்' முதலியவாகத் தமிழறிஞர் பலரானும் வழங்கப்படுஞ் சொற்கள் இதனகத்தும், 'பாணர்' என்னும் நூலினகத்தும் **அங்கனம்**, **இங்கனம்**, **எங்கனம்**, **யாங்கனம்** என்றிங்ஙனமே வழங்கப்பட்டுள்ளன. இவ்வாறு வழங்குவதே செவ்விது என்பது இவற்றை எழுதினோர் ஆய்ந்துகண்ட முடிபாகும்.

"ஆங்கனம் தணிகுவ தாயின் யாங்கும்" (நற். 322)

'ஈங்கனஞ் செல்க தானென என்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்' (புற. 208)

'யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலன் மண்டிலம்' (புற. 8)

என்று, ஆங்கனம் ஈங்கனம் யாங்கனம் என்னுஞ் சொற்களே பழைய செய்யுட்களில் வந்திருத்தலானும், ஙகரம் மொழிமுதற் கண் வாராதென்று தொல்காப்பியம் கூறுதலானும், அங்கனம் ஆங்கனம் இங்கனம் ஈங்கனம் எங்கனம் யாங்கனம் என்னுஞ் சொற்களே பழமைய என்பது அறியப்படும். ஆகலின், யான் இந்நூலில் அங்கனம் இங்கனம் யாங்கனம் என்னுஞ் சொற் களையே வழங்கியுள்ளேன்." (கபிலர்—முன்னுரை) என்று கூறப்பட்டிருத்தல் காண்க.

குற்றாலத் தலபுராணத்தில் ஓரிடத்து வந்து விட்டது என்பது கொண்டு 'முகித்தல்' வினையை ஆளத் தொடங்கினோர் பல நூற்றாண்டுகளாகப் பலரானும் வழக்கினும் செய்யுளினும் வழங்கப்பட்டு வருவதும், ஒரு சிறந்த ஆசிரியரால் இலக்கணம் விதிக்கப்பட்டதும் ஆகிய சொல்லை அவ்வடிவில் வழங்க மறுப் பது வியப்பாகவுள்ளது. நன்னூலாசிரியர் இற்றைக்கு எழு நூறாண்டுகளின் முன்பிருந்தவர் என்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்தது. அவர்

"சுட்டியா வெகர வினவழி யவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே"

என்று இலக்கணங் கூறியிருத்தலின் அவர் காலத்தின் முன்பே அங்ஙனம் முதலிய சொல்வழக்கு அவ்வடிவுடன் நிலவியதென் பது பெறப்படும். அவ்வாறு பயில வழங்குவதனை அறவே யொதுக்கிப் புதியதொரு வாய் பாடுகொண்டு வழங்குவது மரபு நிலை திரித்துப் பொருளுணர்ச்சிக்கு ஊறு செய்வதேயாகும்.

"மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்"

என்னும் தொல்காப்பியச் சூத்திரமும், 'மரபினை நிலைதிரித்துச் சொல்லுபவெனின், உலகத்துச் சொல்லெல்லாம் பொருளிழந்து பிறிது பிறிதாகும்' என அதற்குப் பேராசிரியர் கூறிய உரையும் நோக்கற்பாலன.

இனி, பழைய செய்யுட்களில் 'அங்ஙனம்' முதலியன வழங்காமையின் உண்மையும், தொல்காப்பிய விதியின்மையும் ஆய்தற்குரியன. ஙகரவொற்று அகரவுயிருடனன்றிப் பிறவுயிர்களோடு தமிழில் யாண்டும் வருதல் இல்லை. அவ்வுடன் கூடிய 'ங' என்னும் உயிர்மெய் தானும் அங்ஙனம் இங்ஙனம் உங்ஙனம் எங்ஙனம் யாங்ஙனம் என்னும் ஐந்து சொற்களிலன்றி வேறிடத்து உடனிலையாக மயங்கி வருவதன்று. ஆகலின், செய்யுளில் எதுகைத் தொடையில் அச்சொற்களை அமைத்தல் அரிதென்பது கூறல் வேண்டா. ஙகரத்துடன் மயங்குதற்குரிய வேறுமெய் அதனோடு பிறப் பொற்றுமையும் ஒலியொற்றுமையுமுடைய ககரம் ஒன்றுமே யாம். ஆகலின், செய்யுட் செய்யும் புலவர் எதுகைத் தொடையில் ஙகரத்தைக் ககரமாகத் திரித்து வழங்குதல் இயல்பே. "யாங்ஙன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்" எனத் திரியாது கூறினும் எதுகையாதற் கிழுக்கின்றாம். இறையனார்களவியலின் மூன்றாஞ்சூத்திரம் "ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன்" என்றே படிக்கப்பட்டு வருகின்றது. அன்றியும் வழங்குதற்கு அருமையுடைய சொற்களை எளியவாகத் திரிதல் இயல்பு. மரூஉச் சொற்களிற் பல அவ்வாறு வந்தனவே. அங்கனம் என்பதே பழைய வுருவாயின் வழங்குதற்கு எளிமையுடைய அச்சொல் அங்ஙனம் எனத்திரிதல் பொருத்தமின்றாம். ஆயின், ஙகரம் மொழிமுதற்கண் வாராதென்று தொல்காப்பியம் கூறுதலின் 'ஙனம்' என்பது தொன்மையதாதல் எங்ஙனம் எனின், அங்ஙனம் முதலிய சொற்களை அ—ஙனம் என்றிங்ஙனம் பிரித்துப் புணர்த்துவது தொல்காப்பியர் கருத்தன்றாம். ஆகலின், ஙகரம் மொழிமுதற்கண் வருமென அவர் விதித்திலர்.

"பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியும் எப்பதங்களும்"

என்று நன்னூலார் ஒரு சொல்லையே முதனிலை முதலியவாகப் பிரித்து முடிக்குமாறு கொண்டாற் போலத் தொல்காப்பியர் கொண்டிலர். தொடர்மொழிகளிலுங்கூடப் பண்புத்தொகை, வினைத்தொகை முதலியவற்றை நிறுத்த சொல்லும் குறித்து

வருகிளவியுமாகப் புணர்க்கலாகாதெனல் அவர் கருத்தென்பது "உயிரும் புள்ளியும் இறுதியாகி" என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படும். 'ஙவ்வும் முதலாகும்' எனக் கூறிய நன்னூலாரும் சுட்டு வினாக்களின் பின் வருமென்றாரேயன்றித் தனித்து முதலாகுமெனக் கூறினாரல்லர். ஆகலின், தொல்காப்பியனார் ஙகரம் மொழி முதலில் வருமெனக் கூறாமையின் அங்ஙனம் என்பது பழைய வழக்காகாதெனத் துணிதல் பொருந்தாமை ஓர்க. ஆயின், அது பழைய வழக்கே எனத் துணிதற்குத்தான் சான்று என்னை எனின், கூறுவல். தொல்காப்பிய எழுத்ததிகாரத்தின் முதல் இயலாகிய நூன் மரபில் உடனிலைமெய்ம் மயக்கம் கூறும் நூற்பா

"மெய்ந்நிலை சுட்டின் எல்லா வெழுத்தும்
தம்முற் றாம்வரூஉம் ரழவலங் கடையே"

என்பது. இதில், ர, ழ என்னும் இரண்டும் ஒழிந்த பதினாறு மெய்யும் தம்முன் தாம் வந்து மயங்குமென ஆசிரியர் விதித்திருத்தலின் ஙகர ஒற்றின்முன் ஙகரம்வந்து மயங்கும் சொல் இருந்ததாகல் வேண்டுமன்றோ? தமிழிலே சுட்டு வினாக்களின் பின் ஙனம் என்பது இயைந்துவரும் அங்ஙனம் முதலிய சொற்களன்றி ஙகரம் உடனிலையாக மயங்கற்குரிய வேறு சொல் யாதுளது? திரு. வேங்கடராஜலு ரெட்டியாரவர்கள் பல யாண்டுகளின் முன்பே தொல்காப்பிய எழுத்ததிகாரத்திற்கு உரையெழுதி முடித்துளார் என்பது 'பரணர்' என்னும் நூலின் முன்னுரையால் அறியப்படுகின்றது. அதன்கண், மேல் எடுத்துக் காட்டிய "மெய்ந்நிலை சுட்டின்" என்னுஞ் சூத்திரத்திற்கும் உரையும், உதாரணமும் எழுதப் பட்டிருக்கவே வேண்டும். அவையிற்றை இடையே ஒருகால் நினைக்கவு முடியாமற் செய்த மறதியின் வன்மையே வன்மை. அம் மறதியால் அவர் தாமெழுதிய புத்தகங்கள், கட்டுரைகள் யாவற்றினும் பிழையுள்ளதோர் முடிபினை மேற்கொண்டாராவர்.

தொல்காப்பியம், எட்டுத்தொகை முதலிய சங்கவிலக்கியங்கட்குப் பல நூற்றாண்டுகளின் முன்னர்த்தோன்றியதென்பது ரெட்டியாரவர்கட்கும் உடன்பாடே. அந்நூலினுலே அறுதி

யிடப்படுதலின் அங்ஙனம் முதலிய சொல் வழக்கும் பழமைய தென்பது போதரும். அதனையறிந்தே நன்னூலாரும் அதற்கு மாறின்றித் தமது மதமுந்தோன்ற இலக்கணம் கூறிப்போந்தா ரென்க.

இனி, கபிலர் என்னும் அந்நூலின்கண் "புராணக் கதைகளும் பல **காண்கின்றன;** சிலவற்றில் ஒவ்வொரு சொல்லே **காண்கின்றது;** சிறிதும் மாறுபாடில்லாத அடிகளும் பரக்கக் **காணுதலின்;** ஐவர் புலவர் இயற்றியன எனக் **காண்கின்றன** வாகலின்; கபிலர் பாடிய கலிப்பாட்டுக்களுள்ளும் நாடக வழக்குக் **காண்கின்றது;** நாலசைச்சீரைப்பற்றிய இலக்கணமும் **காண்கின்றது;** ஞானவெட்டியான் என்னும் நூலிலும் **காண்கின்றது;** ஒளிறு என றகர உகரம் **காண்கின்றது;** ழகரத்துக்கு டகரம் **காண்கின்றது;** ககர ழகரம் மாறிக் **காண்கின்றது.**" (பக்கம்—33, 34, 35, 37, 38, 44, 49, 116, 117.) என்றிங்ஙனம் பலவிடத்தும் 'காண்' என்பதனடியாகவரும் வினைச் சொற்கள் காணப்படுகின்றன. இவை பலவிடத்தும் பரக்கக் காணப்படுதலின், இங்ஙனம் எழுதுவதே இலக்கணம் எனக்கருதி எழுதப்பட்டவாதல் வேண்டும். ஆசிரியர் தொல்காப்பியனார்

"வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி யென்றா
இன்னதற் கிதுபய னாக வென்னும்
அன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின்முத னிலையே"

என்பதனால், வினை தோன்றுதற்குரிய காரணங்களைக் கூறி,

"அவைதாம்,
வழங்கியன் மருங்கிற் குன்றுவ குன்றும்"

என்பதனால், சில வினைக்கண் அவற்றுட் குன்றத் தருவன சில குன்றிவரும் என்றார். சேனாவரையர் "குன்றத்தருவனவாவன செயப்படு பொருளும் ஏற்பதும் பயனுமாய்" என அதனை விளக்கி, கொடியாடிற்று, வளிவழங்கிற்று என அவை குன்றி வருதற்கு உதாரணங்காட்டினர். எனவே சில வினைகளிற் செயப்படுபொருள் குன்றிவருதல் இயல்பு. காண்டல் வினையோ

செயப்படுபொருள் குன்றாதது. செயப்படு பொருளை விரித்துரைக்கும் "காப்பின் ஒப்பின்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தில் "நோக்கலின்" என வருதல் காண்க. காப்பு முதலாயினவெல்லாம் பொருள்பற்றி ஓதப்பட்டனவாகலின், நோக்கல் என்பதில் அப்பொருள்பற்றிவரும் காண்டல், பார்த்தல் என்பனவும் அடங்கும். எனவே, காண் என்பதனடியாகவரும் வினைச்சொற்களை, புராணக் கதைகளும் பல காணப்படுகின்றன, சிலவற்றில் ஒவ்வொரு சொல்லே காணப்படுகின்றது' என்றிங்ஙனம் வழங்குதலே மரபாகும். உரையாசிரியர் பலரும் அம்மரபு பிறழாமலே வழங்கி வருவாராயினர்.

"செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே"

என்னுஞ் சூத்திரம் வழக்கின்கண் ஓரோ வழிச் செயப்படு பொருள் வினைமுதல் போலக் கூறப்படும் மரபு வழுவை அமைத்தற்கெழுந்ததே. அவ்வழுவமைதியையே மேற்கொண்டு நூல் உரைகளில் யாண்டும் எழுதுதல் முறைமையன்றாம். இனி, வேற்றுமொழிப் பயிற்சி ஒன்றே கொண்டு தமிழின் இயல்பினை விளக்கலுறுவார் சிலர் தொல்காப்பியத்திலே செயப்பாட்டு வினையைப்பற்றிய குறிப்பு இல்லை எனவும், ஆகலின் தமிழின்கண் செயப்பாட்டுவினை இன்றெனவும் கூறுநிற்பர். செயப்படு பொருள் என்னும் பெயரிலிருந்தே செயப்பாட்டுவினையுண்மை பெறப்படுவதனையும், தொல்காப்பிய முதற் சூத்திரத்தின் தொடக்கமே "எழுத்தெனப்படுப" என அதனைக் குறிப்பிடுதலையும்,

"சொல்லப் பட்டன எல்லா மாண்பும்
மறுதலை யாயினும் மற்றது சிதைவே"

எனப் பிறாண்டும் அஃது ஆளப்படுதலையும் அவர் அறியார். ரெட்டியார் செயப்பாட்டுவினை பலவற்றைத் தாம் வழங்குதலின் அக்கொள்கையினர் அல்லரென்பது பெறப்படும். ஓர் அரைப் பக்கத்திலே (பக். 137) "கூறப்பட்டிருத்தலின், குறிக்கப்பட்டுள்ள, தொகுக்கப் பட்டுள்ளன, காட்டப் பட்டுள்ளன" என்றிங்ஙனம் எட்டிடத்தில் வழங்கியுள்ளமை காண்க. அங்ஙன

மாகவும் காண்டல் வினை ஒன்றின்மட்டில் அவர் கருத்து மாறு பட்டது என்னையோ? ஆயின், காணப்படுகின்றது, காணப்படு கின்றன என ஓரிடத்தும் அவர் வழங்காமற் போகவில்லை. எனினும் முன்னது பெருவரவிற்றாகவும், பின்னது சிறுவரவிற் றாகவும் இருத்தலை நோக்கின், காண்கின்றது என்பதனையே அவர் நினைவு கூர்ந்து வழங்கியுள்ளார் என்பதும், காணப்படு கின்றது என்பது பயிற்சி வயத்தால் அவரறியாமலே போந்த தாம் என்பதும் பெறப்படும். கற்போர் புதுவதாகவுள்ள தனையே வியப்புடன் நோக்குவராதலின் காண்கின்றது என்பதே அவருள்ளத்தில் நிலைபெறுவதாகும். ஒரு பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சி வினைஞரால் எழுதப்பட்டு, உயர்ந்த தாளிற் பரிய உருவினதாகப் பொலிவுற அச்சிடப்பட்டுள்ள புத்தகத்திற் காணப்படுதலின் எத்துணையர் இவ்விழி வழக்கினை விழுமிய வழக்காகக் கொண்டனரோ என உன்ன அச்சமுண்டாகின்றது.

இனி, தமிழ் நூற்களில் யாண்டும் **நக்கீரர்** என வழங்குஞ் சொல் இதில் **நற்கீரர்** என ஆளப்பட்டுளது. இதன் ஆசிரியர் முன்னர் எழுதிய 'பரணர்' என்னும் நூலினும் நக்கீரர் என்றே பலவிடத்தும் வந்துளது. அந்நூலின் கீழ்க் குறிப்புக்களுள் ஒன்றிலேதான் "நக்கீரர் என்பது நற்கீரர் என வழங்கிய சொல் லின் திரிபாகலாம் எனத் தோன்றுகின்றது" என வடநூல் ஒன்றிலே கண்ட 'நத்கீரர்' என்னும் வடிவுக்கு விளக்கம் எழு துழி நற்கீரர் என்று குறிக்கப்பட்டுளது. இந்நூலின்கண் நக் கீரர் என்னும் வழக்கு அறவே கைவிடப்பெற்று, நற்கீரர் என் பதே வழங்குமாறு மேற்கொள்ளப்பட்டுளது. "இனி, நல்லந் துவனார் நல்லிறையனார் நல்லுருத்திரனார் என உயிர் முதன் மொழிகள் வந்தவிடத்தும், நன்னாகனார் நன்னாகையார் என மெல்லெழுத்து முதன்மொழிகள் வந்த விடத்தும், நல்விளக்க னார் நல்வெள்ளியார் நல்வேட்டனார் என இடையெழுத்து முதன் மொழிகள் வந்த விடத்தும் நல் என்னும் அடைமொழியே வந் திருத்தலின் வல்லெழுத்து முதன் மொழிகள் வருமிடத்தும் நல் என்னும் அடைமொழி நிற்றலே முறையாமாகலானும், நற் காட்சி நல்லொழுக்கம் நன்ஞானம் என்று சிறப்புடைப்பொருள்

களைக் கூறுமிடத்தும் நல் என்னும் அடைமொழியே வந்திருத்த லானும், பிறவாற்றானும் நற்கீரர் என்னுஞ் சொல்லே அமை வுடையதென்றும், நக்கீரர் என்னுஞ்சொல் மரூஉமொழி என்றும் தேர்ந்து, நற்கீரர் என்னுஞ் சொல்லை மேற்கொண்டுள்ளேன்'' என அத்துணிபிற்கு ஏதுக் கூறப்பட்டுள்ளது.

நற்கீரர் என்னுஞ் சொல்லே நக்கீரர் எனத் திரிந்ததாகல் வேண்டும் என்பது என்கருத்திற்கும் இசைந்ததே. நான்காண்டு களின் முன் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஒரு சிறப்புக்கூட்டத் தில், 'நல்லந்துவனார்' என்னும் பொருள்பற்றி யான் பேசிய பொழுது, நவ்வந்துவனார் என வழங்குதல் பொருந்தாதென விளக்குழி இதனை விரித்துரைக்கலானேன். எனினும் சான் றோர் வழக்கொடு முரணி நற்கீரர் என வழங்குதல் தகுதியன்று என எண்ணி யான் அவ்வழக்கினை மேற்கொண்டிலேன். வல்லின முதன்மொழிகள் வருமிடத்து மாத்திரமே நக்கண்ணையார், நக் கீரனார், நச்செள்ளையார், நத்தத்தனார், நப்பசலையார், நப்பண்ண னார், நப்பாலத்தனார் என நல் என்பது திரிந்து வருதலின் அதற்கு ஏது என்னென ஆராய்தலே முறைமையாம். வழங்கு தற்கு எண்மையது ஆதலே முதலில் அதற்குக் காரணமாதல் வேண்டும். வல்லெழுத்து ஆறனுள் க ச த ப என்னும் நான்கு மெய்யும் உடனிலையாகவன்றி வேறு மெய்யுடன் மயங்குதல் இல்லை. அதற்குக் காரணம் அருமுயற்சியுடன் அதனைக்கூற வேண்டியிருத்தலே. தமிழெழுத்துக்களின் மயக்க விதியெல் லாம் அவை பெரும்பாலும் எளிய முயற்சியுடன் வழங்குதற் பயத்தவே. ட ற என்னும் இரண்டு மெய்யும் க ச ப என்ப வற்றோடு மயங்குமாயினும் அதனை வழங்குதற்குச் சிறிது அரு முயற்சி வேண்டப்படுகின்றது.

''கப்பத் திந்திரன் காட்டிய நூலின்
மெய்ப்பாட் டியற்கை விளங்கக் காணாய்''

என ஒரு மொழியிலும் இளங்கோவடிகள் றகரத்தைப் பகர மாகத் திரித்திருப்பது காண்க. மகளிர் பேச்சில் **நப்பெண்டு, நப்பிள்ளை, நச்சோல்** என்பன கேட்கப்படுகின்றன. இவ்வாற்றால், ஒரு குறிலின்பின் வரும் றகரவொற்று வேறு மெய்களோடு

மயங்கின் சிறிது வழங்குதற்கு அரியதாதல்பெறப்படும். அஃது உடனிலையாக மயங்குழியும் அத்தகையதே. இளம்பிராயத்தினரைப் பேசுவித்து இப்பொழுதும் அதனை அறிதல் சாலும். எனினும் அதுகொண்டே அத்தகைய சொற்கள் பலவற்றையும் திரித்து வழங்குதல் கருத்தன்றாம்.

நக்கீரர் முதலிய வழக்குப் பண்டுதொட்டு நிலைபெற்று வருவதொன்று. இரண்டு திருவிளையாடற் புராணங்களிலும், சீகாளத்திப் புராணம் முதலியவற்றிலும் நக்கீரர் என்னுஞ் சொல் பலவிடத்து வந்துளது. சுருங்க வுரைக்கின் பழையவும் புதியவுமான நூல், உரைகள் யாவற்றினும் நற்கீரர் என்பது அன்று, நக்கீரர் என்பதே காணப்படுவது என்னலாம். எட்டுத்தொகை, பத்துப் பாட்டுக்களிலே பாடினோர் பெயரைப் புலப்படுத்தும் குறிப்புக்களில் நக்கீரனார், நச்செள்ளையார் முதலிய பெயர்கள் வழங்கியிருத்தலின் அவை தொகுக்கப்பெற்ற அத்துணைப் பழங்காலந் தொடங்கியே ஆன்றோர் பலரானும் அவை அங்ஙனம் வழங்கப்பெற்றன என்பது போதரும். முற்காலத்து நல்லிசைப் புலவர்கள் ஒருவர் ஒருவரைப் பாராட்டும் இயல்பினர் என்பது

"புலனழுக் கற்ற அந்தணாளன்
பரந்திசை நிற்கப் பாடினன்"
"இன்றும் பரணன் பாடினன்"
"அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை"

என்னும் இவைமுதலியவற்றால் அறியப்படும். அவர்கள் ஒருவர் செய்யுளிலுள்ள சிறப்புடைய தொடர்களின் சுவையை நுகர்ந்து இன்புறுதலும், அவற்றையும், அவற்றை இயற்றினோரையும் பாராட்டுதலும் உடையர் என்பது ஒருவர் பாட்டிலுள்ள சொற்றொடர் அங்ஙனமே பலருடைய பாட்டுக்களில் வருதலானும், பதிற்றுப்பத்திலுள்ள ஒவ்வொரு பாட்டுக்களும் **மறம் வீங்குபல் புகழ், சான்றோர் மெய்ம்மறை** என்றிவ்வாறு அவற்றில் வந்துள்ள சிறப்புடைய தொடர்களாற் பெயர் கூறப்படுதலானும், சில புலவர்கள் **அணிலாடு முன்றிலார், இரும்பிடர்த்தலையார்** என்றிங்ஙனம் அன்னோர் பாட்டிலுள்ள தொடர்பற்றி எழுந்த சிறப்புப்

பெயர்களால் வழங்கப் பெறுதலானும் அறியப்படும். இங்ஙனம் சிறந்த புலவரொருவர் பெயரின் முன்னுள்ள நல் என்னும் அடைமொழியைத் திரித்து நக்கீரனர் என்றற்போல ஒருவர் வழங்கா நிற்க ஏனேரும் அதனைப் பாராட்டி அவ்வாறு வழங்கு தற்குரிய பிறபுலவர் பெயர்களேயும் அவ்வணம் வழங்கினராதல் வேண்டும். அவ்வழக்கே பின்னரும் பாட்டு உரைகளிற்பயின்று வருவதாயிற்று. இங்ஙனம் பயிற்சிமிக்க வலியுடைய வழக்கினைப் புறக்கணித்து 'நற்கீரர்' என அழிவழக்குத் தொடர்வது முறை யன்றாம். இப்பெயரினை இங்ஙனம் திரித்தோர் இனி நக் கண்ணையார், நச்செள்ளையார் முதலிய ஏனைப் பெயர்களையும் திரித்து வழங்கும் இயல்புடையராவர். இங்ஙனம் இவர் தாம் நினைத்தபடியெல்லாம் சொற்களின் உருவைமாற்றி வழங்குவ ரேல், அது தெலுங்கு, மலையாளம் போலும் பிறிதொரு மொழி யாவதன்றித் தமிழாகாது என்க.

---

# வடநாடு சென்ற தமிழரசர் காலம்

வித்வான். திரு. மா. இராசமாணிக்கம் B.O.L.

(முற்றொடர்ச்சி துணர் 13. மலர் 1. பக்கம் 34.)

## கரிகாலன் காலம்.

வடநாட்டுப் படையெடுப்புக்குரிய மூன்று காலங்களில் ஈற்றுக்காலம் செங்குட்டுவனுடையதென மேற் கூறிவிட்ட தாலும், கரிகாலன் செங்குட்டுவற்கு முற்பட்டவனுதலாலும், கரிகாலன்காலம் மேற்கூறப்பெற்ற முதல் இரண்டு காலங்களில் ஒன்ருக இருத்தல்வேண்டும். கரிகாலன் இலங்கைத்தீவை வென்று ஆயிரக் கணக்கான அடிமைகளை இலங்கையினின்றும் கொணர்ந்தான் என்பதும் கவனித்தற்குரியது. இலங்கைச் சரிதமாகிய மஹா வம்சத்தால், அசோகன் காலத்து ஈழ நாட் டரசனை தேவனும்பிரியதிஸ்ஸாவுக்குப்பின் மூவர் இலங்கையை ஆண்டனர் எனவும், கி. மு. 170-ல் தமிழரசர் இலங்கையைக்

கைப்பற்றி 70 ஆண்டுகள் ஆண்டனர் எனவும், பின்னர்க் கி.மு. 44—கி.மு. 17-க்கு இடையே 15 ஆண்டுகள் ஆண்டனர் எனவும் அறியலாம்.[9] இவற்றுக்குப் பின்னர்த் தமிழர் இலங்கைமீது படையெடுத்தது முறையே கி. பி. 660—கி. பி. 1065, கி. பி. 1200—கி. பி. 1266-க்கு உட்பட்ட இருகாலங்களில் என்பதும் மஹா வம்சம் கூறுவது.[10] எனவே, முதல் இரண்டு இலங்கைப் படையெடுப்புகளில் ஒன்று கரிகாலன் சம்பந்தம் பெற்றதாகல் வேண்டும். இவ்விரண்டுக்கும் வடநாட்டுப் படையெடுப்புக் குரிய முதல் இரண்டு காலங்களும் பொருந்துகின்றனவா என்பதைக்காண்போம்:

(1) தமிழரசர் வடநாட்டின்மீது படையெடுக்க வசதியான முதற்காலம் கி. மு. 207-கி. மு. 184.

இலங்கைமீது தமிழரசர் படையெடுத்து ஆண்ட முதற் காலம் கி. மு. 170—கி. மு. 101.

இவற்றால், கரிகாலன் ஆட்சிக்காலம் கி. மு. 180—கி. மு. 140-வரை இருந்ததெனெ உத்தேசமாகக் கூறலாம்.

(2) வடநாட்டின்மீது படையெடுக்க வசதியான இரண்டாம்காலம் கி. மு. 148—கி. மு. 27.

இலங்கைமீது தமிழரசர் படையெடுத்து ஆண்ட இரண்டாம்காலம் கி. மு. 44—கி. மு. 17-க்குஉட்பட்ட 15 ஆண்டுகள்.

இவற்றால், கரிகாலனது ஆட்சிக்காலம் கி. மு. 60—கி. மு. 20 என உத்தேசமாகக் கூறலாம்.

எனவே, கரிகாலன்காலம் கி. மு. 180—கி. மு. 140-க்குட் காலமா? கி. மு. 60—கி. மு. 20-க்குட்பட்ட காலமா? என்பது ஆராய்தற்குரியது. இதனை நிர்ணயிக்கப் பெருந்துணைபுரிவது அக்காலத்தில் 'கடல் வாணிபம்' ஒன்றேயாம். கரிகாலனைப்

---

9. 'A Short History of Ceylon' pp. 722-725, by Dr. W. Geiger, in 'Buddhistie Studies'ed. by B. C. Law.

10. 'History of Buddhism in Ceylon', pp. 493,494, 500; by Dr. W. A. De Silva, in 'B. Studies' ed. by B. C. Law.

பாடப்பெற்ற பொருநர் ஆற்றுப் படையிலும் பட்டினப்பாலையிலும் புகார்ச் சிறப்பும் கடல் வாணிபச் சிறப்பும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. தமிழர் ரோம ராச்சியத்தோடு வியாபாரம் செய்யத் தொடங்கியது முன்னரேயாயினும், அது வளர்ச்சியுறத் தொடங்கியது கி. மு. முதல் நூற்றாண்டிற்றான் என்பது ரோமர்கள் எழுதிவைத்த குறிப்புகளால் உணரலாம். கி. மு 39—கி. மு. 14 வரை ரோமச் சக்கரவர்த்தியாக இருந்த 'அகஸ்டஸ்' என்பானுக்குப் பாண்டிய மன்னன் கி. மு. 20-ல் தூதுக் கோஷ்டி ஒன்றை அனுப்பினான் என்பது நோக்கத் தக்கது. இஃதொன்றே தமிழர் ரோமரோடு கடல் வாணிபம் சிறக்க நடத்தினர் என்பதற்குப் போதிய சான்றாம். இக்கடல் வாணிபம் கி.பி. 215-வரை அஃதாவது அலெக்ஸாண்டிரியப்படுகொலை வரை மும்மரமாக நடைபெற்று வந்தது.[11]

சோழ மன்னருள் இமயம் வரை சென்று மீண்டவன் கரிகாலன் ஒருவனே என்பது வெளிப்படை. அவன் சென்று மீண்டது உண்மையே என்பதற்குப் புதிய ஆதாரம் ஒன்றும் கிடைத்திருப்பது நோக்கத் தக்கது. "ஸிக்கிம் இராச்சியத்துக்குக் கிழக்கே அதற்கும் திபேத்துக்கும் உள்ள எல்லையை வரையறுத்து நிற்கும் மலைத்தொடர்க்குச் 'சோழ(ர்) மலைத்தொடர்' (Sola Range) என்றும், அதனை அடுத்துள்ள பெருங்கணவாய்க்குச் 'சோழர்)—கணவாய்' (Sola Pass) என்றும் பெயர்கள் காணப்படுகின்றன.[12] 'சோல' என்பது ஸிக்கிம், திபேத் பாஷைகளில் உள்ள சொற்களுக்குப் பொருந்தவில்லை" எனப் பண்டிதர் மு. இராகவையங்கார் புதிதாகக் கண்டுபிடித்து வெளியிட்ட செய்திக்குத் தமிழ்உலகம் அவர்பால் நன்றிபாராட்டக் கடமைப் பட்டுள்ளது.[13]

---

11. V. A. Smith's 'Early History of India', p. 471.

12. 'Imperial Gazetteer of India;, Sikkim, Vol. X. p. 327; Vol. XXII. p. 365.
    'Hand ,, ,, Vide 'Sala Pass?.

13. Vide 'Kalaimagal', Vol. I. pp. 62, 63 (1932).

இதுகாறுங் கூறியவற்றால், கரிகாற் சோழன் வடநாடு சென்று, சிலப்பதிகாரம் கூறுமாப்போல

"பகைவிலக் கியதிப் பயங்கெழு மலையென
இமையவர் உறையும் சிமயப் பிடர்த்தலைக்
கொடுவரி ஒற்றிக் கொள்கையிற்"[14] பெயர்ந்தமை

உண்மை என்பதும், **அக்காலம் கி. மு. முதல் நூற்றாண்டின் இடைப்பட்ட காலமே** யாகல் வேண்டும் என்பதும் நன்கு விளங்கும் செய்திகளாம்.

கரிகாலன் ஆட்சிக் காலமென உத்தேசமாகக் கொண்ட கி. மு. 60—கி. மு. 20-க்குட்பட்ட காலத்தில் மகதராச்சியம் சுங்கர் வசத்தினின்றும் 'கண்வ வம்சத்தினர்' கைக்கு மாறிவிட்டது. கி. மு. 73-ல் 'வாசுதேவ கன்வா' மகதநாட்டு அரசனுன்; அவனுக்குப் பின் மூன்று கன்வர் கி. மு. 28-வரை ஆண்டனர். அதற்குப்பின் மகதநாடு ஆந்திரர் வசப்பட்டது. எனவே, கரிகாலன் வடநாட்டின்மீது படையெடுத்த காலத்தில் கன்வ வம்சத்தவரே மகதநாட்டை யாண்டு வந்தவராவர். அவர்கள் வலியற்ற அரசர்களே.[15] அவர்கள் காலத்தில் கௌசாம்பியைத் தலைநகராகக் கொண்ட 'வச்சிர' நாடும், உச்சைனியைத் தலைநகராகக் கொண்ட 'அவந்தி'நாடும் சுயாதீனம் பெற்றிருத்தல் வேண்டும். இல்லையேல், கரிகாலன் சென்று மீண்டபோது (மகத நாட்டரசன் பட்டி மண்டபமும்), வச்சிரநாட்டு வேந்தன் கொற்றப் பந்தரும், அவந்தி வேந்தன் தோரணவாயிலும் கொடுத்தனர் எனச் சிலப்பதிகாரம்[16] கூறுவதில் பொருள் இல்லை அல்லவா? இந்நாட்டரசர்கள் சந்திரகுப்த மௌரியன் காலத்திலிருந்து சிற்றரசராகவும் அடிமைப்பட்டும் ஹர்ஷனுக்குப் பின்னும் இருந்து வந்தனர் என்பதற்குச் சரித்திரமே சான்றாகும். * இது நிற்க.

---

14. Indravilavuredutha Kathai, li. 96—98.
15. V. A. Smith's 'Early History of India,' p. 215, 216.
16. Indravilavuredutha Kathai, li. 99—104.
* V. A. Smith's 'Early History of India', p. 369.

### கரிகாலன் சம்பந்தமான குழப்பங்கள்.

'கரிகாற் சோழன் பெருஞ் சேரலாதனோடு போரிட்டான்; பெருஞ் சேரலாதன் தோற்று நாணி வடக்கிருந்து உயிர் நீத்தான்' என வருஞ் செய்யுளைக் கொண்டும், வடக்கிருந்த பெருஞ் சேரலாதன் செங்குட்டுவன் தந்தையாகிய இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனே என மயங்கியும், செங்குட்டுவன் காலம் கி.பி. 2-ம் நூற்றாண்டெனின், அவன் தந்தையின் காலத்தவனாகிய கரிகாலன் கி.பி. முதல் நூற்றாண்டின் இறுதியில் அல்லது கி.பி. 2-ம் நூற்றாண்டின் தொடக்கத்தினன் எனப் பலரும் முடிவு கட்டி விட்டனர். அவர் கூற்றை நம்பி வி. ஆர்தர் ஸ்மித் என்பாரும் அங்ஙனமே கூறிவிட்டனர்.[17] இம்மயக்கத்தைத் தெளிய வைத்த பெருமை திரு. K. N. சிவராஜ பிள்ளையவர்கட்கே உரியதாகும். அவர் எழுதியுள்ள நூலில், "பெருஞ் சேரலாதனைத் தோற்கடித்த கரிகாலன் முற்பட்டவன்; இமயம்வரை சென்ற கரிகாலன் பிற்பட்டவன்; **சங்க நூல்களில் கரிகாலன் என இருவர் கூறப்பட்டுள்ளனர்**" என வெகு அழகாக விளக்கியுள்ளமை பொன்னே போலப் போற்றத் தக்கது.[18] விரிவினை அறிய அவாவுவோர் அவர்தம் நூலிற்கண்டு மகிழ்க.

இஃதன்றி மற்றொரு செய்தியும் ஈண்டு அறியத்தகும்: முதற் கரிகாலன்பால் தோற்று நாணி வடக்கிருந்த 'பெருஞ் சேரலாதன்' வேறு; பெருவிறற் கிள்ளியோடு போரிட்டு அவனுடன் களத்திலேயே மாண்ட 'நெடுஞ் சேரலாதன்' வேறு.[19] இவற்றால், இமயஞ் சென்று மீண்ட கரிகாலனுக்கும் செங்குட்டுவன் தந்தைக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதை நன்குணர்தல் வேண்டும். இத்தகைய மயக்க முடிபுகளால் தமிழ் வேந்தர்வரலாறுகள் பாழுடைந்து சரித்திராசிரியர்ஒதுக்கித்தள்ளக்கூடிய நிலையை அடைந்தன என்பதில் வியப்பில்லை. பொறுமையாகச் சரித்திர அறிவுடனும் இலக்கிய அறிவுடனும் பார

17. Vide his 'Early History of India', p. 482 (4th ed.)
18. Vide his 'Chronology of the Early Tamils', pp. 91—94.
19. Vide Purananuru S. 62, 63.

பட்சமற்ற பகுத்தறிவுடனும் இலக்கியம் ஆராயப்படுதல் வேண்டும். அந்நிலை ஏற்படும் நாளே தமிழகத்துக்குரிய நன்னாளாகும்.

கரிகாலன் காலம் கி. பி. முதல் நூற்றாண்டெனவும் இரண்டாம் நூற்றாண்டெனவும் கூறினோர் அனைவரும் அவனது இலங்கைப் படையெடுப்பும் வடநாட்டுப் படையெடுப்பும் அக்காலங்களில் நடந்திருக்கக் கூடுமா என்பதை அறவே மறந்தனர் என்றே கொள்ளக் கிடக்கிறது. கி. பி. முதல் 5 நூற்றாண்டுகளில் இலங்கைப் படையெடுப்பே நடந்ததில்லை என இலங்கைச் சரிதமே சான்று பகர்கிறது. கி. பி. 7-ம் நூற்றாண்டில் கச்சியை யாண்ட நரசிம்ம பல்லவனுக்கும் இலங்கை யரசனுக்கும் தொடர்புண்டென்பதை இலங்கைச் சரித்திரம் கூறுகிறது. எனவே, கரிகாலன் இலங்கைமீது படையெடுத்த காலம் கி. மு. வில் தான் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகிறதன்றோ? இவை அனைத்தையும் விட, இரண்டாம் கரிகாலனைப் பற்றிய பட்டினப்பாலை, பொருநர் ஆற்றுப்படை இவற்றின் நடைக்கும் முதற் கரிகாலனைப்பற்றிப் பாடப்பெற்ற புற-அகப் பாடல்களின் நடைக்கும் உள்ள சிறிதளவு வேறுபாடு நுணுகி ஆராயத்தக்கது. இரண்டாம் கரிகாலனைப் பற்றிய இரண்டு பாக்கட்கும் மணிமேகலை, சிலப்பதிகாரம் இவற்றுக்கும் உள்ள பேரளவு வேறுபாடும் ஆராயத்தக்கது. சரித்திர ஆராய்ச்சியோடும் பாஷை ஆராய்ச்சியும் இன்றியமையாதது.

இனி அடுத்த இதழில் மிக்க குழப்பத்துக் கிடமாகவுள்ள **'இமயவரம்பன்—நெடுஞ்சேரலாதன்'** வரலாற்றினை ஆராய்வோம்.

(தொடரும்.)

---

# தென்பாண்டி நாடும்—கொற்கைமாநகரமும்.

கோவை, திரு. சி. து. நாராயணசாமி முதலியார் அவர்கள்

(முற்றொடர்ச்சி துணர் 13. மலர் 1. பக்கம் 10.)

இவன் காலத்தில் இவனுடைய பெரிய தந்தை சடைய வர்மன் பராக்கிரம குலசேகர பாண்டியனின் இரண்டாவது புதல்வன், **வரதுங்கராமபாண்டியன்** என்பவன் கி. பி. 1588-ஆம் ஆண்டில் முடி சூடிக்கொண்டு **கரிவலம் வந்த நல்லூரில்** இருந்து அரசு புரிந்தான். ஆகையால் கரிவலம் வந்த நல்லூரும் பாண்டியருடைய அரசிருக்கையாகச் சிறிதுகாலம் இருந்தது. கரிவலம் வந்த நல்லூரானது, **சங்கரநயினுர் கோயிலுக்கு** அருகேயுள்ளது.

அதிவீரராம பாண்டியனும், வரதுங்கராம பாண்டியனும் தமிழில் மாபெரும் புலவர்கள். இவர்களை **''அரசப் புலவர்கள்''** என்றும் கூறுவர். சீரிய செந்தமிழ் நூல்கள் பலவியற்றி, தமிழ்மொழிக்கு ஒப்பற்ற திருத்தொண்டாற்றிய செல்வரும் ஆவர்.

அதிவீரராம பாண்டியனுடைய பெரிய தந்தையார் குலசேகர பாண்டியன் காலம்வரை அதாவது கி. பி. 1552-ஆம் ஆண்டுவரை கொற்கை, பாண்டியர்களுக்கு அரசிருக்கைத் தானமாக இருந்ததென்றும்; அதன் பின்னர் ஏற்பட்ட அழிவுகளால் கொற்கை சீர்குலைந்து போய்விட்டதென்றும், கொற்கை முற்றும் அழிவுபட்ட பின்னரேயே கரிவலம் வந்த நல்லூர் அரசிருக்கையாயிற்றென்றும் கொள்ளக் கிடக்கின்றது.

இனி, கொற்கையின் துறைமுகச் சிறப்பையும், அதில் விளையும் முத்துக்களின் அருமை பெருமைகளையும், அது இருந்தவிடத்தையும், அதன் அழிவு முதலியவற்றையும்பற்றி மேனுட்டு யாத்ரீக அறிஞர்கள் வியந்தோதிய சிறப்பு மொழிகளையும் ஒருவாறு கூறி இக்கட்டுரையை முடிப்பாம்.

'பேரிபிளஸ் மாரீஸ் எரிதிரே' (Priplus maris Eriythrai) என்ற யவன நூலும், 'தாலமி' (Ptolemy) என்ற யவன நாட்டுப் புலவரது பூமி சாத்திரமும், கி. பி. 80; 130-ஆம் ஆண்டுகளில் 'கொற்கை கடற்றுறைப் பட்டினங்களில் சிறந்த துறைமாகவும், உலகில் எங்கும் காணக் கிடையாத அரும்பெரும் முத்துக்கள் இங்கு அகப்படுகின்றதென்றும்; முத்துக் குளிப்பதிலும், சங் கறுப்பதிலும், உப்பு விளைவிப்பதிலும், சிறந்த கைத்தொழில் இடமென்றும்; நெறி தவறாத பாண்டியர்கள் அரசு செய்திருந் தார்களென்றும் விவரிக்கின்றன. முத்துக் குளிப்பதில் பெருந் துறையாகவும்,' நாகரிகஞ் சிறந்த பெரும் பட்டினங்களில் ஒன் றாகவும் விளங்கியிருந்த கொற்கை, கடலுக்கு இறையாகிப் பாழ் பட்ட விடத்தின் சிலபகுதிகளையும்; அப்பகுதிகளுக்கு உட்பட்ட **ஆதிச்சநல்லூர், கோட்டாரம், மணப்படை** முதலிய இடங்களையும் துருவிச் சோதித்த ஆராய்ச்சியாளர்கள், அவ்விடங்களில் சில **பாண்டிய நாணயங்களும்; சிங்கள நாணயங்களும்** அகப்பட்டன வென்றும்; அவைகளில் இரும்பு, பொன் முதலிய உலோகப் பொருள்காற் செய்யப்பெற்ற பொருள்கள் சிலதும், இருந்தன வென்றும்; அப்பொருள்களை உபயோகித்த மக்கள், நல்ல நாக ரிகம் வாய்ந்தவர்களாகவே இருந்திருக்க வேண்டுமென்றும், கூறு கின்றார்கள். கடற்றுறைப் பட்டினமாகப் புகழ்பெற விளங்கிய கொற்கையில் பாண்டியர்கள் தங்கள் மீன் முத்திரையுள்ள செம்பு, பொன், வெள்ளி நாணயங்களை உற்பத்தி செய்வதற்கு ஓர் இடத்தை அமைத்திருந்தார்கள். அதற்கு **"அக்கசாலை"** என்று பெயர். இப்பொழுதும் அவ்விடம் அப்பெயருடன் ஒரு கிராமமாக இருக்கிறது. இதுபோலவே அவர்கள் அரண்மனை யிருந்த விடத்திற்குக் **"கோட்டாரம்"** என்ற பெயரும்; நால் வகைப் படைகள் தங்கியிருந்த இடத்திற்கு **"மணப்படை"** என் றும் பெயர் இட்டிருந்தனர். இவ்விரண்டு இடங்களும் இப் பொழுதும் அப்பெயருடன் சிற்றூர்களாக விளங்கிக் கொண் டிருக்கின்றன.

ஆராய்ச்சியாளர்கள் துருவிச் சோதனை செய்த குறைந்த தினும், மிகக் குறைந்ததான இடங்களில்; பழைமையான

கொற்கை நகரம் இருந்ததின் அடையாளமாகப் பாழ்பட்ட கோட்டை, கொத்தளம், அகழ், மதில்கள், மாட கூடங்கள், கோவில்கள், திருக்குளங்கள் ஆகியவைகளின் அறிகுறிகள் உள வென்றும், "மார்க்கபோலோ" "பேரிபிளஸ்" முதலிய மேனாட்டு ஆங்கில அறிஞர்கள் "கோல்கி" என்று கூறும் அழிவுபட்ட விடத்திலேயே இருந்ததென்றும் கூறியிருக்கின்றனர்.

முந்திய கொற்கையும், பிந்திய கொற்கையும் இப்பொழுது திருநெல்வேலி ஜில்லா பூமி சாத்திர நூலின்படி திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீவைகுண்டம் தாலூகா "ஆதிச்சநல்லூர்;" ஏறல், பழைய காயல், புதுக்கோட்டை, சாயர்புரம், தூத்துக்குடி, தட்டப்பாறை" ஆகிய ஊர்களின் நடுவே யுள்ளன.

ஆயின், ஔகுத்த யுகத்துக்கு விளக்குப்போல் விளங்கிய கொற்கை மூதூர், தென்கடல் திறந்ததன் பெருவாயால், விழுங் கப்பட்டபோது, அதனுள்ளிருந்த பிறநாட்டிற் கிடையாத பெருஞ் செல்வங்கள் யாவும் மணலின்கீழ் அகப்பட்டுப் புதை யுண்டிருத்தல்வேண்டும். புதையுண்ட விடத்தை வெட்டிப் பார்த்துத் தமது பண்டைப் பெருமையெல்லாம் கண்டு களிக்க வேண்டுமென்ற பேரவா, தமிழ் நாட்டு மக்களின் மனத்தை அலைத்துக்கொண்டு தானிருக்கிறது. அரசாங்கத்தாரின் கருணை யிருந்தால் தானே விருப்பம் முற்றுப்பெறும். மேனாட்டு "ஹோமர்," என்ற புலவர், தமது "இலியாது" (Iliad) காவியத் திலே சிறப்பித்த "திராய்" (Troy) நகரத்தைத் தோண்டிப் பார்த்து விட்டது. கிரேக் நாட்டின் இடிந்த பாழான பாகங் களையும்; ரோமாபுரியின் எரிவாய்ப்பட்ட செல்வங்களையும்; ஆயிரம் ஆயிரமான பொருட்செலவில் ஆராய்ந்து பார்த்து அதிசயங் களைக் கண்டு ஆனந்தித்தாய்விட்டது. எஞ்சிய இவ்விடத்தை யும் தோண்டிப் பார்க்கத் திருவருளால் காலம் கைகூடுமாயின், தமிழ்நாடும், கொற்கைமாநகரத்தின் இழந்த அரும் பெரும் பாக்கியங்களையெல்லாம் கண் களிக்கக் கண்டு மகிழ்ச்சியடைந்து விடும்.

தண்டமிழ் பிறந்ததும்; தென்றல் பிறந்ததும்; சந்தனம் தோன்றியதும், முத்துப் பிறந்ததும்; வாணிகம் மேலோங்கி

விளங்கியதும்; தொழிற் சிறப்பு மிக்கதும், இவ்வனைத்திற்கும் தலைமையாகச் சிவபிரானிடத்தும்; முருகவேளிடத்தும், செந்தமிழ் கேட்டுணர்ந்த அகத்தியனார் பொதியமலையும்; நீலத்திரைக் கடலோரத்திலே நின்று நித்தம் தவஞ்செய்யும் குமரியெல்லையும் தென்பாண்டி நாடான இத்திருநெல்வேலியிலே யெனின், இதன் பெருமையை நம்மால் அளவிட்டுக் கூற முடியுமோ?

---

# ஊண் பித்தியார்

(சங்ககாலத்து நல்லிசைப் புலமை மெல்லியலார்.)

கோவை. திரு. சி. து. நாராயணசாமி முதலியார் அவர்கள்

---

**'ஊண் பித்தியார்'** என்று அழைக்கப்பெறும் இந்நல்லிசைப் புலமை மெல்லியலார் பெயர் எட்டுத் தொகையுள் ஒன்றாகிய குறுந்தொகையில், **'ஊன்பித்தி' 'ஊண்பித்தி' 'ஊர்ப்பித்தி'** என்றும்; புறநானூற்றில் **'மாற்பித்தியார்'** என்றும்; சில புறப்பாட்டு மூலப்பிரதிகளில் **'ஊர்ப்பித்தியார்'** என்றும் வழங்கப்படுகிறது. இங்ஙனம் ஒருவர்க்குப் பல திறப்பட்ட பெயர்கள் வழங்க நேர்ந்தது ஏடெழுதுவோரால் நேர்ந்த தவறுதலோ, அன்றி அக்காலத்தில் இவர்க்கு இவ்வாறு பெயர் வழங்கத் தொடங்கியதோ, யாதோ, இன்னதென அறியக் கூடவில்லை. இவரை, நல்லிசைப் புலமை மெல்லியரென்றும்; சங்ககாலத்தவரென்றும் அறிஞர்கள் கருதுகின்றனர், இவர் இயற்பெயர் **"பித்தியார்"** என்பதாம்.

தொன்னூல் உரையாசிரியர்களாக வாய்ந்தவருள் **'சேய'** என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம், **'செய்து'** என்னும் எச்சம், **சேய** என்னும் எச்சப் பொருட்டாக நின்றது என்பாரும்; பிறவாறு கூறுவாருமாகித் தம்முள் இகலி உரை கண்டார் பலரும், இவர் பாடிய குறுந்தொகைப் பாட்டுள் வரும்—**"உரற்கால்யானை**

யோடித் துண்டேஞ்சிய'' என்ற ஓர் அடியினையே செய்யுள் வழக்காக யாண்டும் எடுத்துக் காட்டுவர். அன்னோர் காட்டும் அவ்வடியுள்வரும் 'உண்டேஞ்சிய' என்ற சொன்னய உரிமையால் 'ஊண்' என்ற அடைமொழிபெற்று ''ஊண்பித்தியார்'' என வழங்கப்பெற்றார் என்றல் ஓர் யூகமாகும்.

அல்லது கருப்பு நிறமுள்ள யாட்டினை வெள்ளாடு என்றாற்போன்று தங்கணவர் பிரிந்த பெருந்துயரால் ஊணை விலக்கி அலைவுற்றமை காரணமாக ''ஊண்பித்தியார்'' என்றலும் ஒன்று.

மொழி நூல் (பாஷா தத்துவ சாஸ்திரம்) என ஒன்று தனிப்படக் காணற்கு அரிய இக்காலத்து அறியக் கூடியவை இவ்வளவே. நிற்க

இப்பெண்பாற் புலவரது கணவனாக வாய்ந்தார் இல்லறப் பற்றினைவிடுத்து, சோலைகள் சூழ்ந்த மலைப்புறத்தே தவஞ் செய்யச் சென்றனர். அவர் சென்ற நிலையறியாத இவர், தங் கணவரின் வரவைப் பன்னாள் நோக்கியும் வாராமையால், தங் கொழுநர் தம்மைப்பற்றி நினைந்திலரோ! ஒரோவழி அங்ஙனம் நினைத்தும் மீளற்குவழி ஏலாமையின் வந்திலரோ! என எண்ணமிட்டார்.

''உள்ளார் கொல்லோ! தோழி யுள்ளியும்
வாய்ப்புணர் வின்மையின் வாரார் கொல்லோ!
வரற்புகா வருந்திய மாவெருத் திரலை
யுரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ வரிநிழற் றுஞ்சு
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே''

(குறுந்தொகை. 232.)

''கருதார்கொல்! தோழி! கருதியும் (மீளற்காம்) வழி கூடாமையின் வாரார்கொல்? மணல் வழியிற் புகுந்து வருந்திய ஆண் மான், யானை ஒடித்துண்டு குறைந்த யாமரத்தின் செறியாத நிழலிற் றுயிலும் சோலையையுடைய மலையிடைச் சென்றார்'' என்பது கருத்து.

'அருநிழல்' என்றும் பாடம். மாஇரு—கரிய பெரிய; அன்றி, மீமிசை யெனலுமாம். மெய்ப்பாடு—பெருமிதம். பயன்—ஆற்றுவித்தல்.

இங்ஙனம் எண்ணமிட்டு, பன்னாள் தம்முறைவிடத்தே காத்திருந்தும் வாராமையினால் இறுதியில் தாமே தம் உரியரைத் தேடிச்சென்று காட்டகத்தை யடைந்து சடைமுடி பாரத்துடன் தவக்கோலம் பூண்டு விளங்கும் அவரைக் கண்டார். 'மலை போன்ற உருவமும், கரிய நிறமும், நீண்ட துதிக்கையும், வலிமையும், கொடிய தன்மையுமுடைய யானை, தவத்தால் மிக்குயர்ந்த தங்கணவற்கு விறகு முதலியவற்றைக் கொணர்ந்து (புறநானூற்று 251 ஆம் செய்யுள் உரை) அளிப்பதைக் கண்டு வியந்தார். முன்பு தம்மை அன்பான சொற்களால் உளப்படுத்தியவர் இயலை அறிந்தார். இவர் கூற்றாகவரும், "இல் வழங்கு மட மயில் பிணிக்குஞ், சோல்வலை வேட்டுவ னாயினன்" (புறம் 252) "மனையின்கண் விளங்கும் மடப்பத்தையுடைய மயிலை, (மடப்பம்—மகளிர் குணங்களிலொன்று; மயில்—மயில் போன்ற சாயலையுடைய மனைவியை) அகப்படுத்திக் கொள்ளும் சொல்லாகிய வலையையுடைய வேட்டைக்காரன்" என்பது மேற்குறித்த செய்யுட்டொடரின் கருத்து. இது பாராட்டத் தகுந்தது. மாற்பித்தியாராகிய இப்பெண்பாற் புலவர், பாலைத் திணையையும்; அதன் புறமாக வாகைத் திணையையும் எடுத்துப் பாடியுள்ளார். இவர் பாடியனவாகக் குறுந்தொகையுள் 232ஆம் பாட்டும்; புறநானூற்றுள் 251, 252ஆம் பாட்டுகளுமாக மூன்று பாட்டுகள் கிடைத்திருக்கின்றன. தொல்காப்பிய உரையாசிரியர்கள் தாபதவாகைக்கு எடுத்துக் காட்டாக இவர் பாடிய புறப் பாட்டுக்களையெடுத்து ஆட்சி செய்திருக்கின்றனர். தாபதவகை —பாலைத்திணையின் புறனாய வாகைக்கு உரியது.

இத்தகைய பெண்பாற்புலமையாளர் பாக்களைப் பிற்காலத்தவர் திணை துறைப்படுத்தித் தொகை நூலுட் கொண்டனர்.

# திருக்குறளுதலிய நெறிமுறை

திரு. K. சோமசுந்தரம் பிள்ளை B.A., B.L., தஞ்சை

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 7. பக்கம் 235.)

பேரின்பத்தை எய்துங் காதலே உலக மக்களுக்கு பெரும் பான்மையான இயல்பாதலின் அறிவுடைய மக்கள் ஐம்பொறி களானும் ஒருங்கு நுகரப்பெறும் சிற்றின்ப நுகர்ச்சியைத் தடுத்து, ஆயிழை யாருடன் கூடி யின்புறும் அறத்தை முதற்கண் ஆற்றுது. தவவொழுக்க நிலைநின்று தலைதடுமாறுர். சிற்றின்ப அனுபவத்தில் காணப்படும் மயக்கமும் தியக்கமும் மக்கள் அறிந்து அவைகளை வெறுப்பினுல் நீக்கிய பின்னர் தாம் அவர் களது மனநிலை பேரின்பத்தைப் பெறும் வழியை நோக்கிச் செல்வது இயற்கையேயாகும். இல்லின்கண் கற்புடைய மனைவி யோடிருந்து அறத்தினை புரிதலல்லாது தவநெறியைப் பின்பற்றி ஒருவன் தொடங்குவானேயானுல் வேட்கையெனும் மாசு அத் தவத்தினிடை யடையப் பெறின் அத்தவவொழுக்கமும், அவ் வொழுக்கத்தின் தலைநின்று இறைவன் பாலுண்டான தூய உள்ளமும் என்னுகும்! துறவற மடைந்தாரையும் இல்லறத்தே புகுத்திவிடும் நீரதாகவுடைய இச்சிற்றின்பத்திலே நம்மனதைச் செலுத்தி விடுவதினுல் அதன் சிறுமையும் வெறுமையும் தெளி வாகத் தெளியப்பெற்று இஃது பிறவிப் பெறும் பயனை அடை தற்குரிய கருத்திற்கும் நோக்கத்திற்கும் இணக்கமாய் வேண் டப்படாததெனஅறிந்து நம்மனம் பரம்பொருளிடை நுகரப் படுமின்பம் குறைபாடில்லாத பேரின்பமெனக் கருதி அதன் பாலே பெரிதும் ஈடுபட்டு நிற்கும். எனவே இச்சிற்றின்ப நிலை பேரின்ப உண்மை நிலையைக் காட்டும் தகைமை வாய்ந்ததெனப் பெற்றும்.

இதனைக் குறித்தன்றே பொய்யில்புலவர் இன்பமென்பது இன்னதென அறிய வொண்ணுதவர்கரு பேரின்பத்தின் செம் மையினையும் பெருமையினையும் எடுத்துரைத்து அன்னுரை

பேரின்ப நெறியிலே ஈடுபடச் செய்வது இயலாததெனவோர்ந்து, அகத்தே நிகழுங் காமங் கலந்த காதலின்ப ஒழுக்கத்தினையும் அதன் சிறப்பினையும் காமத்துப்பாலில் அடக்கி விளக்கியுள்ளார். காதலொழுக்கத்தைக் கூறவந்த நாயனார் காதலரிருவருக்கும் ஊடலுண்டாவது இயற்கையெனவும் அத்தகைய ஊடலே அவர்களுக்கு உவகையைத் தரத்தக்கதெனவும் 'உணலினு முண்ட தறலினது காமம், புணர்தலி னூடலினிது' என விளக்கிக்கூறி, ஊடலின் தன்மையை 'துனியும் புலவியுமில்லாயிற் காமங் கனியுங் கறுக்காயுமற்று' என வெகு அழகாகக் கூறுவது வியக்கத் தக்கதே. இவ்வாறு காதலரிருவர் ஓருயிரும் ஈருடலுமாய் காதல் மயமாக ஒன்றி வாழ்ந்து பெறக் கூடியப் பேறுகளைப் பெற்று, பின் வாழ்க்கையின் நிலையாமையறிந்து, சிறுநெறி நீக்கிப் பெருநெறி கைப் பெற்றொழுகும் மனப்பான்மையுடையராய் இறைவனது பேரின்பத்தைப் பெற முயலுவர்,

காமஞ் சான்ற கடை கோட்காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே

என்பது தொல்காப்பியம்.

'காதற் காமங் காமத்துச் சிறந்தது, விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி புலத்தலிற் சிறந்தது' என்றதினுன் இச் சிற்றின்பம் காதலிருவர் கருத்தொருமித் தாதரவு பட்டதென நம் தமிழகத்துச் சான்றோர் கூறி யிருத்தலானும், காதலனும் காதலியும் 'சுரும்புணக்கிடந்த நறும்பூஞ் சேக்கையில், கரும்பும் வல்லியும் பெருந்தோள் எழுதி முதிர் கடல் ஞாலம் முழுவதும் விளக்கும், கதிர் ஒருங்கிருந்த காட்சிபோல'க் கலந்து மகிழ்ந்து ஒன்றி வாழ்தல் கடமையாகும். இவ்வாறு இல்லறத்தில் நின்று ஒழுக்கத்தில் மேம்பட்டு ஒழுகுவார் 'மறப்பருங் கேண்மையொடு அறப்பரிசாரமும் விருந்து புறந்தரும் **பெருந்தண் வாழ்க்கையும்'** உடையராய் வாழ்வார். இத்தகைய நல் வாழ்வென மதிக்கப்படும் இல்வாழ்க்கையினை நடாத்துதற்கு பெண் மக்கள்

தம் கணவன் மார்களுக்கு உறுதுணையா யிருந்தொழுகும் ஒழுக்கமும், மேற்கொள்ளத் தக்க கடப்பாடுகளும் பலவுள. மாதரார்க்கு உயிரினும் நாணம் போற்றத் தக்கது. 'உயிரினுஞ் சிறந்தன்று நாணே' என்று எழுந்த தொல்காப்பிய அடியானும் இவ்வுண்மை வலியுறுத்தப் பெறும். காதல் விருப்பம் முற்றுப் பெறாது மடலூர்வோர் நாணினை முற்றும் இழக்க வேண்டுதலான் அதனைப் பெண் மக்கள் நினைத்தலும் செய்யாரென அகப் பொருட்டுறை விளக்கும் பண்டைத் தமிழ் நூல்களில் பரக்கக் காணலாகும். இதனைக் கண்ணுற்றே நாயனார் பெண் மக்கள் நாணினைப் போற்றி ஒழுகி வாழவேண்டுமெனக் கொண்டு, அவர்களுக்கு மடலேறல் 'கடலன்ன காமமுழந்து மடலேறாப், பெண்ணிற் பெருந்தக்கதில்' என்ற திருக்குறளால் கடியப்பட்டதூம் காண்க.

நாணினும் சிறந்தது கற்பாதலான், கண்ணிற்கு ஒளி போன்று மகளிர்க்கு கற்பு இன்றியமையாதது. குலமகட்குத் தெய்வம் கொழுநனாதால் அவன் சொற் கடங்கி நடப்பதூம், அச்சமும் அன்பும் பெருக அவனுக்கு பணிவிடை செய்வதூம் அறமும் ஆன்ற நோன்புமாதலால், அவர்கள் பிற அறமும் நோன்பும் புரிவது மிகையாகும். மற்றும் அவர்கள் கடவுள் வழிபாட்டினும் கணவர்க்கியற்றும் வழிபாடே தலை சிறந்ததெனக்கருதி பிறிதோர் தெய்வமும் வணங்கக் கடமைப் பட்டாரல்லர். இன்முகமும் இனிய சொல்லும் உடையாளாகி கற்பு நெறியினின்றும் வழுவாமல் தன்னைத் தானே காத்து கணவனைப் பேணி பெரும் புகழ் பெருக்கும் தன்மையவரே நல்லொழுக்கம் வாய்ந்த பெண்ணென்று சொல்லப்படுவர். இப்பெண் மக்கள் புகுந்த மரபும் அவரால் நன்மையுறுதலான், இவர்கள் வாழ்க்கைக்குவேண்டும் பொருள்களை யறிந்து கடைப் பிடித்தொழுக வேண்டும். 'அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல, வில்லாகித் தோன்றாக் கெடும்' என்றதினான், மனைத் தக்க மாண்புடையாள் தன்னைக் கொண்ட கணவாது வரவினிற்குத் தக செலவு செய்பவளா யிருத்தல்வேண்டும். என்னெனின் துறவறம் யாக்கை நிலைக்கேற்ப செயப்படல் வேண்டுமாறு இல்

லறமும் பொருளளவிற் கேற்ப செயப்படல் வேண்டும். இத்தகைய கற்புடைப் பெண்டிர் பெய்யென்று சொல்ல பெருமழை பெய்யும். தீயும், தெய்வமும் அவர்கள் ஏவின செய்தொழுகும்; இத்தகைமையினை யுடையவர்களிருக்கும் நாட்டினில் வேந்தன் கொற்றம் சிதையாது: வானமும் பொய்யாது; இத்துணைப் பெருமை வாய்ந்த மகளிர் வாழ்க்கைத் துணைக்கு சிறந்ததோர் அணிகலம் நன் மக்களைப் பெறுதலே யாமென 'மங்கலமென்ப மனைமாட்சி மற்றத, னன்கல நன்மக்கட்பேறு' எனவும் 'பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த, மக்கட் பேறல்ல பிற' எனவும் திருவள்ளுவர் உணர்ந்து அருளிச் செய்ததனையு மறிக. அன்றியும் புதல்வரைப் பெறுதல் எனும் அதிகாரத்தின்கண் தந்தை மகற்காற்றும் நன்றியை 'தந்தை மகற்காற்று நன்றிய வையத்து, முந்தியிருப்பச் செயல்' என்ற குறளினும், மகன் தந்தைக் காற்றுமுதவியை 'மகன் தந்தைக் காற்று முதவியிவன் றந்தை, யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்' என்ற குறட்பாவினும், திருவள்ளுவர் நமக்கு தெள்ளிதில் தெளியப்படுத்தி, எவரெவர் எந்தெந்த நிலையில் நிற்கின்றனரோ அவரவர்கள் தம் தம் கடமையை செவ்வனே செய்து தீர வேண்டுமென பலபடச் சொல்லி மக்களை ஒழுக்க முடையராய் நல்லாறு கடைப் பிடித்தொழுகும்படி செய்விப்பது போற்றத் தக்கது.

இனி குடிமக்கள் வாழ்க்கையும் ஒழுக்கம் மேம்பட அறத்தின்வழி நின்று உலகத்தைப் புரக்கும் செங்கோலரசர்க்குரிய நல்லொழுக்கத்தினைப்பற்றி ஆராய்வோம். பொருள் கூறுவான் தொடங்கிய நாயனர் பொருளீட்டத்திற்குத் துணைக்காரணமாய் நின்ற அரச நீதி கூறவே அடங்குமெனத் துணிந்து அதனையே வற்புறுத்தி இருபத்தைந்து அதிகாரங்களால் கூறுவாராயினர். மன்னனுக்கும் மன்பதைகட்கும் ஒரு தலையான் வேண்டப்படுவனவாகிய கல்வி, கேள்வி, அறிவுடைமை, நல்லாரிணக்கம், சிற்றினஞ் சேராமை, பெரியோரைத் துணைகோடல், காலமறிதல், இடனறிதல் தெரிந்து தெளிதல், ஊக்கமுடைமை முதலியன யாவும் முன்னர் கூறினோம். இனி அரசர்க்கே சிறக்கும் செங்கோன்மை, ஒற்றுடல் முதலியன யாவும் காண்குவம்.

'படைகுடி கூழமைச்சு நட்பரணா றுமுடையா னரச ருளேறு' எனத் திருவள்ளுவர் அருளிச் செய்தவாறு அரசன் அரசு புரிவதற்கு ஆறு அங்கங்களை யுடையவனா யிருத்தல் வேண்டும். அவை முறையே அமைச்சு, அரசன், கூழ், படை, நட்பு, குடி எனப்படும். மற்றும் அரசன் அறனல்லவை நீக்கி அன்பும் அறமுமே யாக்கையாகக் கொண்டு முறைவேண்டினார்க்கும் குறை வேண்டினார்க்கும் காண்டற்கு எளியவனாகவும், கடுஞ் சொல் கூறாதவனாகவும், அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் என்ற இந்நான்கு இயல்புகளையுடையவனாகவும், நாட்டாரையும், உற்றாரையும், தக்காரையும் மெலியாரையும், பகைவரையும் ஒப்ப நாடி முறைசெய்து காப்பாற்றுகிறவனாகவும், பிறர் துயர் பேணும் பெருமையு முடையவனாயும், சிறுமையும் சினமும் செருக்குமிலாதனாயுமிருத்தல்வேண்டும். இஃதொடு நில்லாது மன்பதை காக்கும் மன்னன் செயத்தகும் கருமங்கள் யாவும் முடிக்கும் உபாயத்தை எண்ணித் துணியக் கடவன். 'செய் தக்க வல்ல செயக் கெடுஞ் செய் தக்க, செய்யாமையானுங் கெடும்' என்பது பொய்யா மொழி. இவ்வாறே ஓர் தொழிலை இயற்றுமுன் அரசன் தன் வலியும், வினைவலியும், மாற்றான் வலியும் துணைவலியுமாராய்ந்து, அத்தொழிலைச் செய்யக் கடவன். அவ்வாறு அவ்வரசன் செய்யின் அவனடையாத பொருள் யாது மில்லையெனக் கூறின் அஃது வெற்றுரை யன்று. இவ்வாறு தொழில்செய்யும் முறைமையான் பகைவரை அஞ்சும் பான்மையில் வைத்து எண்ணிய கருமங்களை யெண்ணி யாங்கு மன உறுதிகொண்டு முடிக்கும் ஆற்றல் வாய்ந்த அரசன் அரசியல் நடாத்துவதற்கு இன்றியமையாத பொருளை மிகுதியாக உடையவனா யிருத்தல்வேண்டும்.

(தொடரும்.)

# திருவாசகத்தே "நமச்சிவாய வாஅழ்க" என்ற அகவல் பாவின் ஆய்வு

திருவாளர். வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியாரவர்கள், காஞ்சீபுரம்

(முற்றொடர்ச்சி துணர் 12. மலர் 11. பக்கம் 412.)

28. வல் அசுரர் ஆகி * மனிதர் ஆய் தேவர் ஆய்—வலிய முருட்டுப் பண்பினை உடைய அசுரர்கள் இனத்தன் ஆகியும், மனிதர்கள் இனத்தன் ஆகியும், தேவர்கள் இனத்தன் ஆகியும்,

அசுரர், மனிதர், தேவர் எனப் பன்மையால் கூறியது அவர்களுள் பல பாகுபாடுகள் உள்ளன ஆதலால். உயர்திணை பற்றியும் ஆம். அசுரர்கள் பிறப்பை, மனிதர்கள் பிறப்பின் சிறந்தது என்றேனும், தேவர்கள் பிறப்பின் இழிந்தது என்றேனும், இவ்விருவகைப் பிறப்புக்களிலேயே அடக்கிக்கொள்ளுதல் வேண்டும். (அசுரர் என்பது பண்பு பற்றிய பெயர். அது புராண கற்பனை போலும்.) அதன் ஏது என்னை எனின், "மக்கள், தேவர், நரகர்உயர்திணை" என்றார் அன்றி, மக்கள், தேவர், நரகர், அசுரர் உயர்திணை என அசுரர்களை—அரக்கர்களைவிதந்து சொல்லாமையால்.

முனிவர் என்பார், மக்களின் சிறந்து பிரிந்தாரே அன்றி, வேறாக ஒரு பிறப்பு இனத்தர் அல்லர். ஆதலால், திருவாதவூர் அடிகள், "முனிவராய்ப்"பிறந்தேன் என்றார்கள் எனல்பொருத்தம் அன்று. ஸ்ரீவியாசர், ஸ்ரீசுகர் போன்ற பெரும் முனிவர்களின் பிறப்பை முனிவர் பிறப்பு எனலாம் எனின், திருவருள் துணையாலும், நல்வினைப் பயனாலும், பேர் அறிவொடு பிறந்த மக்கள் பிறப்பினர்களே அன்றி, அவர்களும், தனித்த ஒரு பிறப்பு இனத்தர் அல்லர். அன்றி, "முனிவராய்" என்ற பாடம் மோனைத் தொடையாலும் முரண் ஆகின்றது. மேலே நின்ற "கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்" என்ற அவ்விடைச் செருகல் அடியின் பொருட்டு "வல்அசுரர் ஆகி" என்ற இவ்வடியில் "மனிதராய்" என நின்ற சிறந்த பாடத்தினை

"முனிவராய்" எனச் சிறப்பில் வகைப் படுத்தினர் போலும். இவ்வேதுக்களினுல், இவ்வடியில் *முனிவராய் என்ற பாடம் பொருத்தம் அன்று. மனிதராய் என்ற பாடமே பொருத்தமும் கவிக் கருத்தும் ஆகும்.

29. **செல்லா நின்ற இ தாவர *செங்கமத்துள்**—பிறவாகவும் நடைபெறுகின்ற இத்தகைய அசையாமையும் அசைவும் என்றவற்றுள்,

* சங்கமத்துள்—என்ற பாடம் மோனைத் தொடையால் முரண் ஆகின்றது. ஆதலால், அப்பாடம் பொருத்தம் அன்று. செங்கமத்துள்—என்ற பாடமே கவிக்கருத்து ஆகும். "சங்கமம்" வடசொல் திரிபு. ஆதலால், கருடன்—கெருடன் எனவும், கலுழன்—கெலுழன் எனவும், கங்கை—கெங்கை எனவும், உறழ்தல் போல சங்கமம் என்ற மொழியும் செங்கமம் என உறழ்தற் பாலதாம்.

30. **எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்**—எல்லாவகைப் பிறப்புக்களிலும் பிறந்து பிறந்து வருந்தினேன். எம்முடைய பெருமானே!

**"மெய்யே யுன் பொன்னடிகள் கண்டு இன்று வீடு உற்றேன்"** என்ற இவ்வடி, இவண், பொருள் இயைபு இன்மையாலும், எதுகைக்கு ஏற்பத் துணைஅடி ஒன்று இன்றித் தனித்து நிற்றலாலும், யகர எதுகை அடிகள் ஏழனுள்ளும் இடைச்செருகல் எனக் கழித்தற் பாலதாம்.

31. **உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற (32) மெய்யா!**—யான் உய்யும் பொருட்டு என் மனத்து இடத்தே ஓம் என்னும் மொழியின் பொருளாய் வீற்று இருக்கின்ற அழிவு இல்லாதவனே!

32. **விமலா! விடைப்பாகா! வேதங்கள் (33) ஐயா! என (வேதங்கள், விமலா! விடைப்பாகா! ஐயா! என)**—வேதங்களைக் கசடு அறக்கற்ற விழுமியோர்கள், நின் அன்பர் அல்லராய் இயல்பாகவே அழுக்கு (மும்மலம்) இல்லாதவனே! என்றும், எறு

ஊர்தீ! என்றும், இறைவனே! என்றும் கூறி வாழ்த்தி நின்னைக் காண முயலினும் அவர்களால் காணப்படா வண்ணம்,

வேதங்கள்—ஆகுபெயர். இவ்வகை அன்றி, "ஆரிய வேதங்கள் தலைவோனே என்று அழைப்பவும், அவற்றிற்கு எட்டாமல் இருப்பவன்" எனலும், தூயர் ஆயினோர்க்கு அல்லது, ஆரிய நான்மறைகளாலும், அவன் அறியப் படாதவன் எனலும் பொருத்தம் அன்று. ஆரியர்களால் எழுதப்பட்ட புராணங்கள் எல்லாம் பொய்க் கதைகள் என்று புகலும் ஒருவர், "உயிர் இல்லாததும் ஒலித்திரளும் ஆகிய" ஆரியர் தம் வேத நூற்கள் பேசும் பண்பினை உடையன என்பதனை மட்டும் ஏற்றுக்கொண்டு "ஆரியர் தம் வேத நூற்களால், சிவபெருமான் அறியப்படாதவன் எனச் சொல்லி, அவ்வேதங்களையும், அவ்வேதங்களுக்கு உரிய ஆரியர்களையும் பழித்துக்கூறி மகிழா நிற்பின் அவர் தம் நிலைமையும், அவரைப் பின்பற்றிப் பழிப்பார் தம் நிலைமையும் நடு நின்று ஆயும் நல்ல அறிஞர் முன் என்னஆகும்? (நகைப்பிற்கு இடனாகும்.) அந்தோ! "உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் வையத்து, அலகையா வைக்கப்படும்" என்ற தேவர் தம் திருமொழியின் குறிப்புப் பொருளைப் போற்றுவான் அவர்களின் செயலை விடுத்து யான் மேல் ஆய்குவென்.

ஆரிய வேதங்கள் இறைவனை அறியாதன ஆயின் ஆரிய வேதங்கட்கு ஒப்பு அல்லது உயர்வு ஆகிய பண்டைய தனித் தமிழ்மறை (வேதம்) என்பது யாது? அம்மறை எந்தக்காலத்தே எவ்விடத்தே எதன் பொருட்டு இறைவனை நேரில் அழைத்துப் பார்த்துப் பேசிற்று? அம்மறையை எந்த எந்த முந்தை ஆசிரியர்கள் தங்களால் ஆக்கப்பட்ட எந்த எந்த நூற்கள் இடையே அல்லது உரைகள் இடையே இது தமிழ்மறை அல்லது சைவர் தமிழ்மறை எனச் சுட்டிச் சிறப்பித்து ஆண்டார்கள்? என்பன விளங்கவில்லை. எவரேனும் அறிந்து இருப்பின் அவர் "தன் நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்த பின் தன் நெஞ்சே தன்னைச் சுடும்." என்ற பொய்யா மொழியைப் போற்றிப் புகலுவர் ஆயின் யானும் அவரைப் பெரிதும் போற்றுவன்.

33. **ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே!**—விண்ணின் உயர்ந்தவனும், கடலின் ஆழ்ந்தவனும், நிலத்தின் பரந்தவனும் ஆகி அணுவின் நுணுகியவனும் ஆய் இருப்பவனே!

34. **வெய்யாய்! தணியாய்! * இயமான்! விமலாஅ!**—வெப்பத் தன்மையை உடையவனே! தண்ணிய தன்மையை உடையவனே! யாவருக்கும் தலைவனே! இறைவனே!

இயமான்—யஜமான் என்ற வடசொல் திரிபு. அது இவண் அண்மைவிளி. "இயமான்—ஆம் விமலா" எனப் (வகையுளிப் படுத்திப்) பாடம் கொண்டால் மோனைத் தொடையால் முரண் ஆகின்றது. மோனைத் தொடை முரணுமைப் பொருட்டு "இயமான்" எனப்பிரித்தும், தளை தட்டாமைப்பொருட்டு "விமலாஅ" என அளபெடை கூட்டியும், இரண்டு விளிப்பெயர்கள் ஆகக் கோடலே பொருத்தமும் கவிக் கருத்தும் ஆம். *இயமானனும் விமலா என வகையுளிப் படுத்தலும், இருபெயர் ஒட்டாகப் பொருள் கொள்ளுதலும் பொருத்தம் அன்று.

35. **போய் ஆயின எல்லாம் போய் அகல வந்து அருளி**—நின் அடியார்களின் துன்பங்கள் யாவும் சென்று நீங்கும் பொருட்டு நின் அருளினாலே அவர்களைத் தேடிச்சென்று,

"அருளிவந்து" என மொழி மாற்றுக. வந்து—சென்று. போய்அகல—இருபெயர் ஒட்டும் ஆம்.

36. **மெய் ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்சுடரே!**—அவர்கள் மனத்தே ஐயமும் திரிபும் நீங்குதற்கு ஏது ஆன நல்ல ஞான வடிவம் ஆகித் திகழ்கின்ற சுடர் மேனியானே!

"சுடர் மெய்யே" என மொழி மாற்றுக.

37. **எ ஞானம் இல்லாதேன் இன்பம் பெருமானே!**—எத்துணையும் நல்ல ஞானம் இல்லாதவன் ஆகிய என்னிடத்தும் ஆசிரியனாக வந்து இன்பத்தினை அருளிய பெருமானே!

38. **அ ஞானம் தன்னை அகல்விக்கும் நல் அறிவே!**—அடியார்கள் உடைய அறிவு இன்மையைப் போக்குவிக்கும் நல்ல அறிவு வடிவாய் இருப்பவனே!

இறைவன் ஆகமங்கள் வடிவாகவும், ஆசிரியர்கள் வடிவாகவும் நின்று அஞ்ஞானத்தை நீக்குபவன் ஆதலால் அகல்விக்கும் எனப் பிறவினை வாய்பாட்டால் கூறினர்.

39. **ஆக்கம் அளவு இறுதி இல்லாய்!**—பிறத்தலையும், இத்தனைப் பிராயத்தன் என்ற கால அளவினையும், இறத்தலையும், என்றும் இல்லாதவனே!

39. **அனைத்து உலகும் (40) ஆக்குவாய்! காப்பாய்! அழிப்பாய்! அருள் தருவாய்!** எல்லா உலகங்களையும் படைப்பவனே! படைத்தவற்றைக் காப்பவனே! காத்தவற்றை அழிப்பவனே! அழித்தவற்றை அருள் செய்பவனே!

அடிகள், புணர்ச்சிப் பத்தில், பா, பத்தில் "காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதும்" என்றார்கள். அதனை இவண் நினைக்க.

"**போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பில்**' என்ற இவ்வடி எதுகைக்கு ஏற்ப துணை அடி ஒன்று இன்றித் தனித்து நிற்றலால் இடைச் செருகல் ஆம். "ஆக்கம், ஆக்குவாய், போக்குவாய்," என்ற ககர எதுகை அடிகள் மூன்றனுள்ளும், "போக்குவாய்" என்ற இவ்வடி தலையாகு எதுகையே ஆயினும், பொருள் இயைபு இன்மையால் இடைச் செருகல் எனக் கழித்தற்கு உரியதாம்.

41. **நாற்றத்தின் நேரியாய்! சேயாய்! நணியானே!**—பூவில் முற்றும் தங்கிய மணம் போல உலகங்கள் எல்லாம் குறைவின்றித் தங்கி இருக்கின்ற பண்பை உடையவனே! அன்பர் அல்லாதவருக்கு நெடுமையில் இருப்பவனே! அன்பு உடையவருக்கு அண்மையில் இருப்பவனே!

நாற்றத்தின் நேரியாய் என்றது இறைவன் எள்ளின் உள் எண்ணெய்போல எங்கும் நிறைந்தவன் என்னும் ஓர் வழக்குப்படி ஆம். நாற்றத்தின்—நாற்றம்—மணம், அத்து—சாரியை; இன்—உவம உருபு.

42. மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே!—திருப் பெருந்துறையில் குருந்த மாத்து அடியில் யான், நின் புகழைச் சொல்ல இயலாதபடி என் சொல்லையும், நின் அழகின் பெருமையை நினைக்க இயலாதபடி என் நினைவையும் கடந்து என்முன் நின்ற ஆசிரியனே!

இறைவன், வாக்கு மனங்கட்கு எட்டாதவன் என்றபடி.

43. கறந்தபால் கன்னலொடு நெய் கலந்தாற் போல (44) சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று (சிறந்த அடியார் சிந்தனை உள் நின்று கறந்தபால் கன்னல் ஒடு நெய் கலந்தால் போல தேன் ஊறி) அன்பால் சிறந்த நின் அடியார் மனத்தே நீ தங்கி ஆவின் நின்றும், புதிதாகக் கறந்து காய்ச்சிய பாலில், கரும்பின் சாற்றினால் ஆகிய பாகையும், தேன் நெய்யையும், கலந்தால் அன்ன இனிமையைப் பெருக்கி,

பாலொடு நெய்கலந்து உண்ணல் வழக்கின்று. அவ்வழக்கு இன்மையைப் "பாலொடு தேன் கலந்தற்றே" என்ற தேவர்தம் திருமொழியாலும், "பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை நாலும் கலந்து" என்ற ஔவைப் பெருமாட்டியார் தம் திருமொழியாலும் அறிக. கன்னல்—ஆகு பெயர். ஒடு—எண் ஒடு. நெய்—தேன் நெய்; விகாரம். நிற்க, அடிகள், திரு அம்மானையுள், பா, பதினன்கில் "தேனையும், பாலையும், கன்னலையும் ஒத்து இனிய கோனவன்" என்றும், பா, பதினாறில் "தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்" என்றும், திருப்பூவல்லியுள் பா, பதினொன்றில் "பாலும் அமுதமும் தேனுடனாம் பராபரமாய்" என்றும் கூறிய குறிப்பை இவண் நினைக்க.

45. பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்!—ஒருவர், இழிகுலத்தே பிறந்தவர் ஆயினும், அவர் நினக்கு அன்பு உடையவராய் இருப்பின் அவரை இழி குலத்தார் எனச் சொல்லப்படும் பிறப்பினால் ஆகிய அவருடைய இழிவைக் கெடுக்கும் எமக்குப் பெருமானே!

கள்—சாரியை. பிறப்பு ஆகுபெயர். பிறப்பினால் ஆகிய இழிவைக் கெடுத்தல் ஆவது இழிகுலத்தே பிறந்தவர்கள் எனச்

சொல்லப்படும் திருப்பாணனார், திருநந்தனார் முதலிய அடியார்களை உயர்குலத்தே பிறந்தவர்கள் எனச் சொல்லப்படும் பார்ப்பனர்களையும் வணங்கும்படிச் செய்தமையே யாம்.

46. **நிறங்கள் ஓர் ஐந்து உடையாய்!**-வெண்மை, பொன்மை, செம்மை, பசுமை, கருமை, ஆகிய ஐந்து வகை வண்ணங்களாக இருப்பவனே!

"ஐந்து நிறங்கள் உடையாய்" என மொழி மாற்றுக. ஓர் —அசை. இவ்வகை அன்றி, இறைவன் ஐந்து தொழில்களை உடையவன் என்றும், ஐம் பெரும் பூதங்கள் வடிவன் ஆனதால், அவைகளின் நிறங்களை உடையவன் என்றும், ஐந்து திருமுகங்களை உடையவன் ஆனதால், அம்முகங்களின் ஐந்து நிறங்களை உடையவன் என்றும் கூறுவர் சிலர். அவற்றுள் பொருந்துவன கொள்ளுக.

46. **விண்ணோர்கள் ஏத்த (47) மறைந்து இருந்தாய்! எம் பெருமான்! (53) விமலா!**—தேவர்கள் புகழ்ந்து சொல்லியும், அவர்களால் காணப்படா வண்ணம் கரந்து இருந்தவனே! எம் பெருமானே! விமலனே!

47. **வல் வினையேன் தன்னை (48) மறைந்திட மூடிய மாய இருளை (மறைந்திட மூடிய மாயஇருளை வல்வினையேன் தன்னை)**—நல்ல அறிவு சிறிதும் தோன்றாதபடி (அதனைக் கெடும்படி) மூடிய மிக்க அறிவு இன்மையை உடையவனும், தீய வினையை உடையவனும் ஆகிய என்னை,

நல்ல அறிவினை வெள்ளை அறிவு என்றும், நல்லது அல்லாத அறிவினைக் கரிய அறிவு என்றும் கூறும் வழக்குப்பற்றி, இருளை அறிவு இன்மை என்றும், அதனால் மூடப்பட்டது நல்ல அறிவு என்றும் கொள்ளுக-மாயஇருள்-இருபெயர் ஒட்டு; ஆகுபெயர்.

49. **அறம் பாவம் என்னும் அரும் கயிற்றால் கட்டி**—புண்ணியம் பாவம் என்ற இரண்டு அவிழ்த்தற்கு அரிய கயிறுகளினாலே கட்டப்பட்டதும்,

அறம் பாவம் என்றதற்கு நல்வினை, தீவினை என ஆகுபெயரால் கூறினும் பொருந்தும்.

50. **புறம் தோல் போர்த்து எங்கும் புழு அழுக்கு மூடி**—புறத்தே தோலால் மூடப்பட்டதும், உள் இடம் முற்றும் புழுத் தற்கு ஏது ஆன நிணம் ஆகிய அழுக்கால் செறிக்கப் பட்டதும்,

மூடுதல்—வெற்றிடம் இன்றி நிரப்புதல். அடிகள், ஆசைப் பத்துள், பா, இரண்டில் "மொய்ப்பால் நரம்பு கயிறாக மூளை என்பு தோல் போர்த்த குப்பாயம்" என்றும், அடைக்கலப் பத்துள், முதற்பாவில், "புழுக்கள் உடைப் புன்குரம்பை" என் றும் கூறிய குறிப்பை இவண் நினைக்க.

51. **மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை**—அழுக்கைச் சொரிகின்ற ஒன்பது புழைகளை உடையதும் ஆகிய உடலுள் வாழும்,

குடில்—உடல். ஐ—உருபு—மயக்கம்.

52. **மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய**—புலன்கள் ஐந்தும் வருந்தும்படி வஞ்சனையைச் செய்தலால்,

"புலன் ஐந்தும் மலங்க" என மொழி மாற்றுக.

53. **விலங்கு மனத்தால் விமலா உனக்கு**—நல்ல நெறியின் நின்றும் நீங்கிய மனத்தைக் கொண்டு உன்னிடத்தே,

"விமலா" முன் 47-ல் கூட்டப்பட்டது. விலங்குமனம்—வினைத்தொகைத் தொடர்.

54. **கலந்த அன்பு ஆகி கசிந்து உள் உருகும்**—பொருந்திய அன்பு உடையவன் ஆகி மனம் நெகிழ்ந்து உருகும்,

"உள் கசிந்து உருகும்" என மொழி மாற்றுக.

55. **நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி**—நன்மை என்பது இல்லாமையால், சிறுமை உடையவன் ஆகிய என்னையும் விரும்பி,

தான்—அசை.

56. **நிலம் தன்மேல் வந்து அருளி நீள் கழல்கள் காட்டி**—திருப்பெருந்துறையாகிய திருப்பதியின் கண்ணே நின் அருளி னாலே வந்து நின்னுடைய பெருமை பொருந்திய திருவடிகளைக் காட்டி,

"அருளிவந்து" என மொழி மாற்றுக.

காட்டி என்ற வினை எச்சத்தின் 58-ல் சிறந்த என்றபெயர் எச்சத்துச் சிறத்தலொடு முடிக்க. தன்—சாரியை.

57. **நாயின் கடையாய் * நடந்த அடியேற்கு**—அறியாமையால் நாயினும் கீழாய் ஒழுகிய அடியேன் இடத்து,

* "கிடந்த" என்ற பாடம் மோனைத் தொடையால் முரண் ஆகின்றது. ஆதலால் நடந்த என்ற பாடமே பொருத்தமும் கவிக் கருத்தும் ஆம்.

58. **தாயின் சிறந்த தயா ஆன தத்துவனே!**—ஈன்றாளின் அன்பினும் சிறந்த அன்பினை உடைய பண்பினனே!

59. **மாசு அற்ற சோதி! மலர்ந்த மலர் சுடரே!**—குற்றம் இல்லாத ஒளியே! பூத்த பூவின் பொலிவே!

மாசு அற்ற சோதி என்றது சூரியனின் ஒளிபோல் தோன்றுதலும் மறைதலும் இன்றியும், சந்திரனின் ஒளிபோல் தேய்தலும் வளர்தலும் இன்றியும், தீபின் ஒளிபோல எழுதலும் தாழ்தலும் இன்றியும், என்றும் ஒருதன்மைத்தாய் உள்ள இறைவனின் ஒளிப் பண்பினைக் குறித்தபடியாம். சோதி—அண்மை விளி.

60. **தேசனே! தேன் ஆர் அமுதே! சிவபுரனே!**—எரிவண்ணனே! இனிமை பொருந்தியதும், இறத்தலை ஒழிப்பதும் ஆகிய மருந்தே! முத்தி நகரின் முதல்வனே!

அடிகள், புணர்ச்சிப் பத்தின் பா, ஒன்பதில் "பிறவிப் பிணிக்கு ஓர் மருந்தே" என்றார்கள். அக்குறிப்பை இவண் நினைக்க. அமுது—அமிர்தம்; வடசொல் திரிபு. ஏ—விளிஉருபு முன் அடி 12-ல் "தேசன் அடி போற்றி" என்றதன் உரைக் குறிப்பைக் காண்க. தேசன்—நெருப்பு என்ற பொருள்சுட்டும் தேஜ் என்னும் வடசொல் அடியாகப் பிறந்த பெயர். சிவபுரம்—முத்திநகர். முத்தி இடத்தினைப் பௌத்த ஜைனர்களாகிய பிறரும் சிவகதி, சிவபுரம் என்பர்.

61. **பாசம் ஆம் பற்று அறுத்து பாரிக்கும் ஆரியனே!**—உயிர்களைப் பிணித்த புண்ணிய பாவங்கள் ஆகிய கயிறுகளை அறுத்துப் பாதுகாக்கும் தலைவனே!

"பற்று ஆம் பாசம்" என மொழி மாற்றுக. முன்னும் அடி 49-ல் "அறம் பாவம் என்னும் அரும் கயிற்றால் கட்டி" என்றார்கள் அடிகள். இவண் அக்குறிப்பை நினைக்க.

62. **நேச! அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சம் கெட (நேச! நெஞ்சில் வஞ்சம் கெட அருள் புரிந்து)** அன்பு என்னும் பொருளுக்கு இடமாக இருப்பவனே! அடியார்கள் நெஞ்சு இடத்தே வஞ்சனைத் தோன்றாமைப் பொருட்டு நின்றாலே அருள் செய்து,

63. **பேராது நின்ற பெரும் கருணை பேர் ஆறே!**—அந்நெஞ்சின் நின்றும் நீங்காது நின்ற அன்பாகிய வெள்ளத்துக்குப் பெருமை பொருந்திய அருள் ஆகிய பெரிய ஆறு போன்றவனே!

கருணை—அருள். ஆறு என்றதனுக்கு ஏற்ப வெள்ளமும் கருணை என்றதனுக்கு ஏற்ப அன்பும் வருவித்து உருவகம் செய்க.

64. **ஆரா அமுதே அளவு இலா பெம்மானே!**—துய்க்கத் துய்க்கத் தெவிட்டாத இனிமையாய் இருப்பவனே! நெடியன் குறியன் எனச் சுட்டு அளவால் சொல்ல இயலாத பெருமையை உடையவனே!

நெடியது குறியது எனச் சுட்டிச்சொல்ல இயலாத பெருமை என, பெருமைக்கு அடையாக்கலும் ஆம்.

65. **ஓரா தார் உள்ளத்து உள் ஒளிக்கும் ஒளியானே!**—நின் பெருமையை அறியாதார் மனத்து அகத்தே கரந்து நிற்கும் கரவனே!

ஒளியான்—ஒழிதல் என்ற சொல்லின் திரிபு ஆகிய ஒளிதல் என்னும் தொழில் பெயர் அடியாகப் பிறந்த பெயர். ஒளிதல்—மறைதல்; கரத்தல்.

66. **நீராய் உருக்கி! என் ஆர் உயிராய் நின்றானே!**—நின் பெருமையினை அறிந்தார் மனத்தினை நீர் போல் நெகிழச் செய்பவனே! என்னிடத்தே பொருந்திய உயிராக இருப்பவனே!

உருக்கி—பெயர்; அண்மைவிளி, ஆய்—உவம உருபு—மேல் அடியில் ஓரா தார் என்றதனால் இவண் (ஓர்ந்தார்) அறிந்தார் என்ற பெயரை வருவித்துக் கொள்ளுக.

67. **இன்பம் உம் துன்பம் உம் இல்லானே! உள்ளானே!**—என்றும் துன்பம் இல்லாதவனே! இன்பம் உள்ளவனே!

இவ்வடி, எதிர் நிரல் நிறை பொருள்கோள். உம்மைகள்—சாரியைகள். இவ்வகை அன்றி, "இன்பமும் துன்பமும் ஆகிய இரண்டும் இல்லாதவனே!" எனவும், "அவை இரண்டும் உள்ள வனே!" எனவும் உரைத்தல் பொருத்தம் அன்று. உரைப்பின், அவ்வுரை, இறைவன் ஒருகால் துன்பம் உடையவன் என்றும், இன்பம் இல்லாதவன் என்றும் பொருள் தந்து திருச் சைவசித் தாந்த ஆகம நூற்களோடு முரண் ஆம்.

68. **யாவையும் ஆம் அல்லையும் ஆம் (69) சோதியனே!**—எல்லாப் பொருள்கள் ஆகியும், அப்பொருள்களின் வேறு ஆகி யும் ஒளியாய் இருப்பவனே!

69. **துன் இருளே! தோன்றாப் பெருமையனே!**—செறிந்த இருளாகி இருப்பவனே! நின் திருவருளைப் பெறுதார், தம், கண் புலனால் காணப்படாத பெருமையை உடையவனே!

70. **ஆதியனே! அந்தம் நடு ஆகி அல்லானே!**—எல்லாப் பொருள்கள் இடத்தும் முதலாக இருப்பவனே! எல்லாப் பொருள்கள் இடத்தும் கடையும், நடுவும் ஆகியும், அவற்றின் வேறு ஆகியும் இருப்பவனே!

71. **ஈர்த்து என்னை ஆள் கொண்ட எந்தை! பெருமானே!**—என்னை வலித்து அடிமைகொண்ட இறைவனே! பெருமானே!

"என்னை ஈர்த்து" என மொழி மாற்றுக. எந்தை—இறை வன். முன் அடி பதினொன்றின் உரைக் குறிப்பை நினைக்க.

(தொடரும்.)

## தமிழ்ச்செய்திகள்.



சர்மனிதேசத்து பர்லின் (Berlin) நகரில் திருவள்ளுவர் திருநாள்:—பர்லின் நகர், இந்து மாணவர் கழகத்தார் 10-5-37 தேதியில் திருவள்ளுவர் திருநாளைக் கொண்டாடினர். அது போது பர்லின் பல்கலைக் கழகத்தின் Ausland-Hoschschule வில் தமிழ்ச்சொற்பொழிவாளராகிய Dr. H. பேதன் (Beythan) அவர்கள் "தமிழ் இலக்கியத்தின் முற்றோற்றம்" என்பது பொருளாக விரிவுரை நிகழ்த்தினர். அதன் பெரும் பகுதி திருக்குறள்பற்றியே இருந்தது.

---

## மதிப்புரை.

**கம்பராமாயணசாரம்: அயோத்தியா காண்டம்:**-இது அயோத்தியாகாண்டத்தில் கவிநலம் நிரம்பியபாடல்கட்கு இராவ்சாகேப் V. P. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் எழுதிய அகலஉரை நூலாகும். முதலியார் அவர்களின் தமிழ்ப்புலமையும், ஆராய்ச்சித்திறனும் தமிழுலகு நன்கு அறியும். ஒவ்வொரு பாடலின் கவிநயமும், பொருட் செறிவும் செவ்விதின் விளக்கப்பெற்றிருக்கின்றது. புலமைமிக்கோரது நன்மதிப்பிற்குரித்தாய இந்நூல் தமிழ் மக்களால் பெரிதும் போற்றப்படவேண்டும்.

நல்லதாளில் கவின்பெறப்பதித்து இந்நூலை வெளியிட்ட தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரின் தமிழ்த்தொண்டு யாவராலும் போற்றுதற்குரியது.

இதன் விலை ரூபாய் 1—6—0; 1—12—0.